தவரும் ஆயுதம்பிடித்தவரெல்லாரிலும் மேலானவரும் பகைவரைத் துயரப்படுத்துகிறவருமாகிய பரசுராமரென்னும்பிராமணர், தம்பொரு ளையெல்லாம் பிராமணர்களுக்குக் கொடுக்கவிரும்பினதை அந்தத் துரோணர் கேள்விப்பட்டார். பரசுராமருடையதனுர்வேதத்தையும் திவ்யாஸ்திரங்களையும்கேள்வியுற்று அவற்றிலும் ராஜநீதிசாஸ்திரத் திலும் ஆசைவைத்தார். பிறகு அந்தச்சிறந்ததபஸுள்ளவரும் ச்ரே ஷ்டமானபாகுபலமுடையவருமாகிய அந்தத்துரோணர், தவமும்பிர ம்மசாரிவ்ரதமுமுள்ளசிஷ்யர்களால் சூழப்பட்டவராய்ப் பர்வதங்களி ற்சிறந்த மஹேந்திரத்துக்குப்போகப் புறப்பட்டார். பிறகு மஹா தபஸ்வியான துரோணர் மஹேந்திரம்சேர்ந்து க்ஷத்ரியர்களைக்கொல் லுகிறவரும் விரோதிகளைக்கொல்லுகிறவருமாகிய அந்தப்பரசுராம ரைக்கண்டார். பிறகு துரோணர் சிஷ்யர்களுடன்கூட ப்ருகுச்ரே ஷ்டரான பரசுராமரையடைந்து தம்பெயரையும் அங்கிரஸின்குலத் தில் தம்ஜனனத்தையும் தெரிவித்தார்; தெரிவித்தபின் பூமியில் தலை படும்படி அவர்பாதங்களில்வந்தனஞ்செய்தார். பிறகு எல்லாவற்றை யும்கொடுத்துவிட்டு அப்போதே வனம்போகக்கருதின மஹாத்மா வான பரசுராமரைநோக்கித் துரோணர், "பிராமணோத்தமரே! பரத் வாஜருக்குப்பிறந்தவனும் அயோநிஜனுமாகிய துரோணனென்று பெயருள்ள நான் திரவியத்தைவிரும்பி வந்திருப்பவனென்று நீர் அறி யக்கடவீர்" என்றுசொன்னார். க்ஷத்ரியர்களெல்லாரையும் அழித் தவராகிய அந்தமஹாத்மா துரோணரைநோக்கி, "பிராமணச்ரேஷ் டனே! உனக்கு நல்வரவு; என்னவிரும்புகிறாய்? எனக்குச்சொல்" என்றுசொன்னர். இவ்வாறு பரசுராமரால் கேட்கப்பட்ட துரோ ணர் யுத்தவீரர்களிற்சிறந்தவரும் அனேகதனங்களைக் கொடுக்கப் போகிறவருமாகிய பரசுராமரைநோக்கி, "சிறந்தவ்ரதமுள்ளவரே! நான் அளவற்றதனத்தை வேண்டுகிறேன்" என்று சொன்னார். அதற் குப் பரசுராமர், "தபோதனனே! இங்குள்ளபொன்னும் மற்றஎன்ன என்னபொருளிருக்கிறதோ அவையணைத்தும் என்னால் பிராமணர் களுக்குக்கொடுக்கப்பட்டன. அவ்வாறே அனேகநகரங்களை மாலை போல்அணிந்த இந்தக்கடல்சூழ்ந்த பூமிதேவியை முழுவதும் கசிய பருக்கு நான்கொடுத்துவிட்டேன். இப்போது இந்தச்சரீரமாத்திர மும் அனேகவிதங்களான உயர்ந்த அஸ்திரசஸ்திரங்களும் எனக்கு மிச்சமாயுள்ளன. பிராமணனே! சரீரத்தையாகட்டும், அஸ்திரங் களையாகட்டும், சஸ்திரங்களையாகட்டும் நீ கேள். துரோணா! உன க்கு நான் என்னகொடுக்கவேண்டும்? அதை உடனேசொல்" என்றார்.

துரோணர், "பார்க்கவரே! அஸ்திரங்களெல்லாவற்றையும் *ப்ரயோகம், †ஸம்ஹாரம், ‡ரகஸ்யம் இவற்றுடன்எனக்குப் பூர்ணமாகக் கொடுக்கக்கடவீர். பிராம்மணோத்தமரே! இதுதான் தனங்களுக்கெல்லாம் தனம்" என்றார். பரசுராமர், 'ஆகட்டும்' என்றுசொல்லி, உடனே அவருக்கு ரகஸ்யமென்றுசொல்லப்பட்ட ஸ்வரூபஜ்ஞானத்தோடும் § புரச்சரணவிரதத்தோடும் தனுர்வேதத்தையும் அஸ்திரங்களையும் பூர்ணமாகக்கொடுத்தார். அவையெல்லாவற்றையும் பெற்றுக்கொண்டு அஸ்திரங்களில்தேர்ந்த பிராமண ச்ரேஷ்டரான துரோணர் மிகுந்தஸந்தோஷத்துடன் தம்அன்புள்ளஸ்நேகிதனுகிய துருபதனிடம் சென்றார்.

---

நூற்றுநாற்பத்தோராவது அத்தியாயம்.

---

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)

---:o:---

(துரோணர் துருபதனிடம்சென்று பழையஸ்நேகத்தைப் பாராட்டிப் பேசினபோது துருபதனுல் அவமதிக்கப்பட்டதும், அதனுல் கோபத்துடன் அஸ்தினுநகரம்வந்ததும், ராஜகுமாரர்களுக்கு விளையாட்டில் கிணற்றில்விழுந்தபந்தையும் மோதிரத்தையும் எடுத்துக்கொடுத்ததும், அந்தஸமாசாரத்தைக்கேட்டுப் பீஷ்மர் அவரை எதிர்கொண்டழைத்ததும்.)

பிறகு பராக்ரமசாலியான துரோணர் துருபதராஜாவினிடம் சென்று, "ராஜாவே! இங்குவந்திருக்கும்என்னை ஸ்நேகிதனுக அறி" என்றுசொன்னர். ஸ்நேஹிதராகிய துரோணரால் அன்புடன் இவ்வாறுசொல்லப்பட்ட பாஞ்சாலதேசத்தரசன் இவருடைய அந்தச் சொல்லைப் பொறுக்கவில்லை. ஐசுவரியத்தினுடையகர்வம்நிரம்பிய அந்தத்துருபதராஜன் கோபத்தாலும் பொறுமையாலும் புருவங்களை நெறித்துச் சிவந்தகண்களோடு துரோணரைப்பார்த்து அடியில்வருமாறு சொல்லலானுன்: "பிராம்மணரே! உம்முடைய இந்தப் புத்தி திருந்தவில்லை; நல்லபொருத்தமுள்ளதாயில்லை. பிராமணரே! அதனுல் என்னைப்பார்த்து உமக்கு நான் ஸ்நேகிதனென்று துணிந்து பேசுகிறீர். புத்திக்குறைவுள்ளவரே! அபிவிருத்தியிலிருக்கிற ராஜ

---

* விடுவது. † திருப்பியெடுத்துக்கொள்வது. ‡ ஸ்வரூபஜ்ஞானம். § முன்னதாகஅனுஷ்டிக்கவேண்டியவை.

களுக்கு அதிர்ஷ்டமும் பொருளுமில்லாத (உம்மைப்போன்ற) இவ்
கையானமனிதர்களோடு ஸ்நேகமிருப்பது எங்குமில்லை. உள்ள
ஸ்நேகங்களும் மனிதன்முதிரும்போது நாளடைவில் தளர்ந்துபோ
கின்றன. எனக்கு உம்முடன் ஸ்நேகம் உம்முடையஸாமர்த்தியத்
தைப்பற்றி முன்னேஉண்டாயிற்று. இவ்வுலகத்தில் யாருடையமன
திலும் ஸ்நேகம் அழியாமல்நிற்பதில்லை. ஸ்நேகத்தைப் பெண்ணு
சையும் அழித்துவிடும்; கோபமும் அழித்துவிடும். இவ்வாறு ஒரு
காரணம்பற்றியுண்டான பழமையாகப்போன ஸ்நேகத்தை நீர் ஆதர
வாகப்பற்றுதேயும். பிராம்மணச்ரேஷ்டரே! எனக்கு உம்முடன்
ஸ்நேகம் காரியத்தைப்பற்றியுண்டாயிருந்தது. தரித்திரன் தனவா
னுக்கும், மூர்க்கன் வித்வானுக்கும், பேடனானவன் சூரனுக்கும்,
ஸ்நேகராவதில்லை. ஸ்நேகிதனென்பதைமுன்னிட்டு என் என்னை
விரும்புகின்றீர்? எந்தஇருவருக்கும் ஐச்வரியம்ஸமமாகஇருக்குமோ,
எந்தஇருவருக்கும் கல்விகேள்விகள் ஸமமாகஇருக்குமோ, அவ்விரு
வருக்குந்தான் விவாகமும் ஸ்நேகமும் பொருந்தும்; வலுத்தவனுக்
கும் இளைத்தவனுக்கும் பொருந்தா. வேதமோதாதவன் வேத
மோதினவனுக்கு ஸ்நேகனுகான். ரதமுள்ளவன் ரதமில்லாதவனுக்கு
ஸ்நேகனுகான். ராஜ்யமில்லாதவன் ராஜாவுக்கு ஸ்நேகனுகான். ஸ்நேக
னென்பதைமுன்னிட்டு ஏன் என்னைவிரும்புகிறீர்" என்றான். பரத்
வாஜபுத்ரரான துரோணர் துருபதனால் இவ்வாறுசொல்லப்பட்டபின்
சற்றுநேரம் கலக்கமுற்றுக் கோபம்மிகுந்தவராயினார். அந்தப்பெரு
மைபொருந்திய புத்திமான், துருபதனைப்பற்றி மனத்தில் ஒருநிச்சய
ஞ்செய்துகொண்டு தாம் ஸ்வல்பகாலத்தில்நிறைவேற்றக்கூடிய ஒரு
பிரதிஜ்ஞையைச்செய்து சிஷ்யர்களால் சூழப்பட்டவராய்ப் புத்திர
னுடன் கௌரவராஜர்களின்நகரமாகிய அஸ்தினபுரம்சேர்ந்தார்.

அந்தப்பிராம்மணச்ரேஷ்டரான துரோணர் அஸ்தினபுரம்வந்து
அங்கே க்ருபருடைய கிருகத்தில் மறைவாகத் தம்மை யாருக்கும்
தெரியாமல்வஸித்தார். பிறகு ஸமர்த்தராகிய அவருடையபுத்ரர்,
க்ருபர்சொல்லிவைத்தபிறகு பாண்டவர்களுக்கு அஸ்திரங்களைக் கற்
பித்தார். அவரையும் ஜனங்களறியவில்லை. இவ்வாறு அவர் பிற
ருக்குத்தெரியாமலே அங்கே சிலகாலம் வஸித்தார். பிறகு வீரர்க
ளாகிய ராஜகுமாரர்கள் சேர்ந்து அஸ்தினபுரத்திலிருந்து வெளியே
போய் அவ்விடத்தில் பந்துவிளையாடிக்கொண்டு உத்ஸாஹத்துடன்
திரிந்துகொண்டிருந்தனர். அவர்கள் விளையாடும்போது தர்மபுத்
திரருடையமோதிரம் கிணற்றில்விழுந்தது; பந்தும் அதிலேயேவிழு

ந்தது. கிணற்றுஜலத்தினால்மூடப்பட்டு ஆகாயத்தில் நக்ஷத்தி
தின்உருவம்போல் காணப்படும் அந்தமோதிரத்தைக்கண்டு அந்
குமாரர்கள் முயற்சியுடன் அந்தக்கிணற்றைச்சுற்றிக்கொண்ட
பிறகு அவர்கள் ஊக்கமுடன் பந்தையெடுக்க முயற்சிசெய்த
ஆனால் பந்துகிடைக்கத்தக்கஉபாயத்தை அவர்கள் கண்டுபிடி
வில்லை. அதனால் வெட்கித் தலைகுனிந்தவர்களாக ஒருவரையொ
வர் பார்த்தனர். உபாயத்தையறியாதவர்களாகவும் அந்தப்பந்தி
மேல் விருப்பங்கொண்டவர்களாகவுமிருந்தனர். அவர்களின்ஸமீ
தில் அக்னிஹோத்திரம்செய்துகொண்டிருப்பவரும், கறுத்தும் ஏ
மையுற்றும் நரைத்தும் இளைத்துமிருப்பவரும், பிரயோஜனத்தை
ம்புகிறவருமாகிய ஒரு பிராமணரைக்கண்டனர். காரியத்திலே
மனம்வைத்த அந்தக்குமாரர்கள் உத்ஸாஹம்குன்றி அம்மஹாத்
வான பிராமணரைக்கண்டு அவரிடம்சென்று அவரைச்சூழ்ந்துகொ
டனர். பிறகு சக்தியுள்ளவரும் தம்காரியத்தைமுக்கியமாகக்கொ
டவருமாகிய துரோணர் அந்தக்குமாரர்களைக்கண்டு மெல்லச் சிரித்
நயமாகப்பேசத்தொடங்கினர். "ஆ! உங்கள்க்ஷத்ரியபலம் என்ன
உங்களுக்குஇதென்ன அஸ்திராப்யாஸம்! பரதவம்சத்திற்பிறந்த
கள் பந்தைஎடுக்காமலிருக்கின்றீர்களே! நான் இந்தப்பந்து மோ
ரம் இரண்டையும் *சீவிர்க்குக்களினால் எடுத்துவிடுவேன். எனக்கு
போஜனம்கொடுங்கள்" என்றார். உடனே, அவர்களுள் குந்திபுத்
ரானயுதிஷ்டிரர் துரோணரைநோக்கி, "பிராம்மணரே! கிருபருடை
அனுமதியின்மேல் சாஸ்வதமான போஜனத்தை நீர் அடையலாம்
என்றுசொன்னர். இவ்வாறுசொல்லப்பட்ட துரோணர், சிரித்து
கொண்டு பரதகுமாரர்களைப்பார்த்து, "இந்தப் பிடிசீர்க்குக்களை நா
அஸ்திரமந்திரத்தினால் மந்திரித்திருக்கிறேன்; இவற்றின்சக்தியை
பாருங்கள். இந்தச்சக்தி மற்றவர்களிடமிராது. ஓர் சீர்க்கினால் ப
தைக்குத்துவேன். அந்தசீர்க்கை மற்றொன்றினாலும் அதையும்மே
ற்றொன்றினாலும் சேர்க்கும்போது பந்தை நான்எடுத்துவிடுவேன்
என்றுசொன்னர். பிறகு துரோணர் தாம்சொன்னதையெல்லா
சொன்னபடியே சீக்கிரத்தில் செய்தார். அதைக்கண்டு அந்தக்கும
ரர்கள் வியப்பினால் மலர்ந்தகண்களோடு இது மிக்கஆச்சரியமென்
நினைத்து, "பிரம்மரிஷியே! இந்தமோதிரத்தையும் சீக்கிரமாக எடு
கக்கடவீர்" என்றுசொன்னர்கள். பிறகு ஸமர்த்தரும் பெரு
புகழ்பெற்றவருமாகிய துரோணர் அம்பையும் வில்லையும் எடுத்து

* ஒருவகைப்புல்.

ரண்டு அம்பினல் மோதிரத்தைக்குத்தி அதை மேலேற்றினர். வர் அம்புடன் மோதிரத்தைக் கிணற்றிலிருந்து எடுத்து ஆச்சரி ந்துடன்நிற்கும் குமாரர்களுக்குத் தாம் கர்வப்படாமல் கொடுத் ர். மோதிரம்எடுக்கப்பட்டதைக்கண்டு அந்தக்குமாரர்கள், "பிரா ணரே! நமஸ்காரஞ்செய்கிறேம். இந்தஸாமர்த்தியம் மற்றவரிட ல்லே. நீர் யாவர்? யாருடையவர்? உமக்கு நாங்கள் என்னசெய்யக் வோம்? நாங்கள் தெரிந்துகொள்ளவேண்டும்" என்று அவரைக் ட்டனர். இவ்வாறுசொல்லப்பட்ட துரோணர் பிறகு ராஜபுத்திரர் ளப்பார்த்து, "என்உருவத்தையும் குணங்களையுஞ்சொல்லிப் பீஷ் நக்கு என்னைத்தெரிவியுங்கள். மிகச்சிறந்தபராக்கிரமமுள்ள அந் ப்பீஷ்மரே அறிந்துகொள்வார்" என்றுசொன்னர். குமாரர்கள், 'அப் படியே' என்றுசொல்லி, பீஷ்மரிடம்சென்று அந்தப்பிராமணர்சொன் தையும் அவருடைய அவ்விதமானசெய்கையையும் முற்றிலும் ரைத்தனர். பீஷ்மர் குமாரர்களிடம்கேட்டு அவரைத் துரோண ன்று தெரிந்துகொண்டார். அப்போது ஆயுதம்பிடித்தவர்களிற் ந்தவரான பீஷ்மர் அவர்தாம் மிகத்தகுதியுள்ள ஆசாரியரென்று ணத்து உடனே துரோணரைத் தாமே விசேஷமரியாதையோடு ழைத்துவந்து அவருடையவரவுக்குக் காரணத்தைத் தெளிவாக சாரித்தார். துரோணரும் அதையெல்லாம் தெரிவிக்கத்தொடங் னர்.

"தவறுதலில்லாதவரே! நான் முன்னே தனுர்வேதத்தைப்பெற வண்டுமென்கிறவிருப்பத்தினுலும் அஸ்திரங்களுக்காகவும் அக்னி வச்யமஹரிஷியிடம் போனேன். அடங்கினமனஸோடுஜடைகளைத் ரித்துக் குருசுஶ்ரூஷையில்ஊக்கத்துடன் பிரம்மசாரியாக அனேக ருஷகாலம் அவரிடம் தீர்க்கவாஸஞ்செய்தேன். பாஞ்சாலதேசத் வனும் மஹாபலசாலியும் பிரபுவுமான யஜ்ஞசேனனென்னும் ராஜ மாரனும் அஸ்திரங்களுக்காக அவரிடத்திலேயே குருகுலவாஸஞ் சய்தான். அங்கே அவன் எனக்குச் சினேகிதனுகவும் உதவிசெய் வனுகவும் அன்புள்ளவனுகவுமிருந்தான். கௌரவவம்சத்துப்பிர வே! பீஷ்மரே! நான் சிறுபிராயமுதல் அவனேடுசேர்ந்து வெகு லம் கூடவே அத்தியயனஞ்செய்துகொண்டிருக்கும்போது எனக் ப்பிரியமாகப்பேசுகிறவனும் என்பிரியத்தையேசெய்கிறவனுமாகிய ந்த என துசினேகிதன். என்னைப்பார்த்து, "துரோணரே! மஹாத் ாவாகிய என்தந்தைக்கு நான் மிக்கஅன்புள்ளபுதல்வன். அந்தப் ாஞ்சாலராஜா எப்போது எனக்கு ராஜ்யபட்டாபிஷேகம் செய்யப்

போகிறுரோ அப்போது அதில் பாதிராஜ்யம் நீர் அனுபவிக்கத் கது ; என்ஸத்தியத்தின்மேல் ஆணையிடுகிறேன் ; என்னுடையபே ங்களும் தனமும் ஸுகமும் உம்முடையஸ்வாதீனம்" என்று எனக் ஸந்தோஷத்தைவிருத்திசெய்கிறசொல்லைச் சொன்னுன். இவ்வ சொல்லி அஸ்திரங்களைக்கற்றுக்கொண்டபிறகு என்னுல்கௌர கப்பட்டுச் சென்றுன். அப்படி அவனுல் சொல்லப்பட்ட நான் போதுமுதல் அந்தச்சொல்லை எப்பொழுதும் மனத்தில் நினைத் கொண்டு பிதாவின்கட்டளைப்படி புத்திரலாபத்திற்காகப் புகழ்பெ வளும், சிறந்தபுத்தியுள்ளவளும், மஹாபதிவ்ரதையும், அக்நிஹே த்திரத்திலும் வேள்வியிலும் இந்திரியஜயத்திலும் எப்போதும் கமுள்ளவளுமாகிய சரத்வானுடையபுத்திரியான க்ருபியை விவா செய்துகொண்டேன். அந்தக்கௌதமியாகிய கிருபி பயப்படத்த ஸாமர்த்தியத்தையும் செய்கையையுமுடையவனும் சூரியனுக்கெ பான ப்ரதாபமுள்ளவனுமாகிய அச்வத்தாமாஎன்னும் ஔரஸபுத் னைப் பெற்றுள். என்னுல் பரத்வாஜர் எப்படியோ அப்படியே நா அந்தப்புத்ரனுல் ஸந்தோஷமுற்றேன். அங்குள்ள தனிகர்களுடை பிள்ளைகள் பசுவின்பால்குடிக்கக்கண்டு குழந்தையான அசுவத்தா அழுதான். அது என்னைத் திசைமயங்கச்செய்தது. பீஷ்மரே ஸ்வதர்மத்திலிருக்கும்*ஸ்நாதகன் கஷ்டப்படக்கூடாது என்று ம ஸில்நிச்சயம்செய்துகொண்டு சுத்தமானதனத்தைத் தர்மமாகஸம் திக்கநினைத்து அந்தத்தேசமெல்லாம் இந்தக்கோடிக்கு அந்தக்கோ அனேகம்தரம் சுற்றித்திரிந்தும் ஒருகறக்கிறபசு எனக்குக் கிடை காமற்போயிற்று. இந்தக்குமாரனை பவஅரிசியின்மாக்கரைந்தஜல தைக்கொடுத்து ஏமாற்றினேன். கௌரவரே! இக்குழந்தை ம கரைத்தஜலத்தைக்குடித்து இளமையினுல் தெரியாமல் நானும்பா குடித்தேனென்று மகிழ்ந்து எழுந்து கூத்தாடினுன். கூத்தாடி கொண்டு குழந்தைகளால்சுற்றிக்கொள்ளப்பட்டுப் பரிகாசம்செய்ய தக்கநிலைமையடைந்த அந்தப்புத்திரனைக்கண்டு அதனுல் எனக் வருத்தமுண்டாயிற்று. "ஏழையான துரோணனுல் என்னஉத அவனுக்குத் தனம்கிடைக்கிறதில்லை. அவன்பிள்ளை பாலின்மே ஆசையினுல் கரைத்தமாவைக்குடித்து ஆனந்தம்கொண்டு நானு பால்குடித்தேனென்று கூத்தாடுகிறுன்" என்று பேசிக்கொள்ளு ஜனங்களின்சொல்லைக்கேட்டபிறகு என்னறிவு விழுந்தது. நா எனக்குள்ளேயே நிந்தித்துக்கொண்டு, "நான் பிராமணர்களால்வி

* வித்தையிலும்தபஸிலும்தேர்ந்தவன்.

டட்டு இகழப்பட்டவனைக வஸித்தாலும் வஸிப்பேன். பொருளா
சப்பட்டுப் பிறரிடம் மிக்கஇழிவானஸேவைவையைச் செய்யேன்”
ன்று மனத்தில்நினைத்தேன். பீஷ்மரே! இவ்வாறுநினைத்து, பிறகு
ன் என்பத்நியுடன்கூட என்பிரியமானபுத்திரனை அழைத்துக்கொ
டு பழைய ஸ்னேகத்தையனுஸரித்துத் துருபதனிடம்சென்றேன்.
வனுக்குப் பட்டாபிஷேகமானதைக்கேட்டதும், துருபதனுடைய
னேகத்தையும் அந்தவாக்கையும் நினைத்து நான் க்ருதார்த்தனெ
று எண்ணி ராஜ்பாதிபத்தியத்திலிருக்கும் சினேகிதனிடம் மிகுந்த
ந்தோஷத்தோடுபோனேன். பிரபுவே! துருபதனிடம்சென்ற
து, ஸ்னேகிதன்என்பதை முன்னிட்டு, “புருஷச்ரேஷ்டனே!
ன்னைஸ்னேகிதனுக அறி” என்றுசொன்னேன்; துருபதனிடம்
னேகிதனைப்போலவே நெருங்கி ஸந்தித்தேன். அவன் என்னை
ன் அறியாதவன்போல் சிரித்துக்கொண்டு பின்வருமாறுசொல்லலா
ன்: “பிராமணரே! உம்முடைய இந்தப்புத்தி திருந்தவில்லை. நல்
பொருத்தமுள்ளதாகஇல்லை. பிராமணரே! அதனால் என்னைப்பார்
ு உமக்கு நான் ஸ்நேகிதனென்று துணிந்து பேசுகிறீர். இவ்வுல
தில் சினேகங்கள் மனிதன்முதிரும்போது நாளடைவில் தளர்ந்து
கின்றன. எனக்கு உம்முடன்ஸ்நேகம் உம்முடையஸாமர்த்திய
தைப்பற்றி முன்னேயுண்டாயிற்று. வேதம்தெரியாதவன் வேதம்
ரிந்தவனுக்கும், ரதமில்லாதவன் ரதமுள்ளவனுக்கும், ஸ்னேகித
ார். ஒற்றுமையினுல் ஸ்நேகமுண்டாகிறது; வேற்றுமையினுல்
ல்லாமற்போகிறது. உலகத்தில் ஸ்னேகம் அழியாமலிருப்பது எக்
லத்திலும் யாருக்கும் இல்லை. ஸ்நேகத்தைப் பெண்ணுசையும்
ழித்துவிடும்; கோபமும் அழித்துவிடும். இவ்வாறு ஒருகாரணம்
றி உண்டாகிப் பிறகு பழமையாகப்போனஸ்னேகத்தை நீர் ஆதர
கப்பற்றுதேயும். பிராம்மணச்ரேஷ்டரே! எனக்கு உம்முடன்
னேகம் காரியத்தைப்பற்றி உண்டாயிருந்தது. தரித்திரன் தனவா
க்கும், மூர்க்கன் வித்வானுக்கும், கையாலாகாதவன் சூரனுக்கும்
நேகராவதில்லை. ஸ்னேகிதனென்பதைமுன்னிட்டு ஏன் என்னை
நம்புகிறீர்? புத்திக்குறைவுள்ளவரே! அபிவிருத்தியிலிருக்கிறரா
க்களுக்கு அதிர்ஷ்டமும் பொருளுமில்லாத இவ்வகையானமனி
ர்களோடு ஸ்நேகமிருப்பது எங்குமில்லை. வேதமோதாதவன் வே
மாதினவனுக்கும், ரதமில்லாதவன் ரதமுள்ளவனுக்கும், ராஜ்ய
லாதவன் ராஜாவுக்கும்ஸ்நேகராகார். ஸ்நேகிதனென்பதை
ன்னிட்டு என் என்னை விரும்புகிறீர்? நான் ராஜ்யத்தைப்பற்றி

உமக்குப் பிரதிஜ்ஞைசெய்திருப்பதாக எனக்குத் தெரியவில்லை
பிராம்மணரே! ஒரு ராத்திரிமட்டும் நீர்விரும்பினபோஜனத்தைக்கொ
டுப்பேன்" என்றான். இவ்வாறு அவனால் உரைக்கப்பட்ட நா
ஸ்வல்பகாலத்தில் நிறைவேற்றக்கூடிய ஒரு பிரதிஜ்ஞையைச்செய்
அப்போதே என்மனைவியுடன் புறப்பட்டேன். பீஷ்மரே! இவ்வா
துருபதனால்சொல்லப்பட்டநான் கோபம்நிரம்பிக் குணமுள்ளசிஷ்ய
களைவேண்டிக் கௌரவர்களிடம் வந்தேன். அதனால் உம்முடை
மனோரதத்தைப் பூர்த்திசெய்வதற்காக நான் அங்கிருந்து இந்தஅ
கான அஸ்தினபுரத்திற்கு வந்திருக்கிறேன். உமக்கு என்னசெ
யக்கடவேன்? சொல்லும்" என்று துரோணர் சொன்னார். இவ்வா
சொல்லப்பட்ட பீஷ்மர் துரோணரைப்பார்த்து அப்போதே, "வி
லில் ஏறிடப்பட்டநாணைத் தளர்த்தலாம். நல்லஅஸ்திரவித்தை
கொடும். கௌரவர்களின்கருத்தில் விசேஷமாகக்கௌரவிக்கப்பட்
ஸந்தோஷத்துடன் ஸௌக்கியங்களையனுபவியும். கௌரவர்களு
குள்ளதனம் ராஜ்யாதிபத்யம் தேசங்கள் ஆகிய எல்லாவற்றிற்கு
நீரே முதன்மையானராஜா. எல்லாரும் உமக்கு ஏவல்செய்கிறவர்க
பிராம்மணரே! நீர் வேண்டினதுஎதுவோ அதுசெய்யப்பட்டதென்
நினைக்கவேண்டும். பிரம்மரிஷியே! நீர்வந்தது ஸந்தோஷம். எ
னிடத்தில் பெரிய அனுக்கிரஹம்செய்திருக்கிறீர்" என்றுசொன்ன

---

## நூற்றுநாற்பத்திரண்டாவது அத்தியாயம்.

---

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

(துரோணர், கௌரவபாண்டவர்களைச் சிஷ்யர்களாக அங்கீகரித்தது
அர்ச்சுனனுக்கு ரஹஸ்யங்களை விசேஷமாகச்சொன்னதும், துரோ
ணாசாரியதுப்ரதிமையை ஆராதித்து ஏகலவ்யன் தனுர்வித்தை
யில் தேர்ச்சியடைந்ததும், வேட்டைக்காகப்போன
பாண்டவர்கள் அதைக்கண்டபிறகு அர்ச்சுனனுக்காகத் துரோ
ணர் ஏகலவ்யனிடம்சென்று அவன்வலக்கைக்கட்டைவிரலைத் தக்ஷி
ணையாகவாங்கினதும், துரோணர் சிஷ்யர்களைப் பரீக்ஷைசெய்ததும்.)

பீஷ்மர் அந்தத்துரோணரைக் குருவாக அங்கீகரித்தார். ரா
வே! பீஷ்மர், பாண்டவர்களுடன்கூட அந்தப்பேரன்மார்களனைவ
யும் அழைத்துக்கொண்டு இவர்கள் உமதுசிஷ்யர்களென்றுசொல்
பலவகையானதனங்களோடு சாஸ்திரப்பிரகாரம் துரோணருக்கு அ

ணம்செய்தார். அப்போது துரோணர் புத்திமான்களுட்சிறந்தவ
கிய பீஷ்மரைநோக்கி, "ஆயுதங்கள்தெரிந்தவரும் சிறந்தபிரஜ்ஞை
ள்ளவரென்று எல்லாராலும்மதிக்கப்பெற்றவருமாகிய கிருபாசாரி
ருமிருக்கிறார்; ராஜாவே! நான் இருப்பதில் அந்தப்பிராமணர் மன
ருத்தத்தை அடைவாராயின் நான் உங்களிடம் கொஞ்சம்தனத்தை
சித்துப்பெற்றுக்கொண்டு ஸந்தோஷமடைந்து வந்தபடியே என்
ச்ரமத்திற்குச் செல்வேன்" என்றசொல்லைச்சொன்னார். இவ்
றுசொன்னவுடன், யுத்தவீரரிற்சிறந்தவரானபீஷ்மர், பிராம்மண
ரேஷ்டரும் ஆசாரியர்களில்முதன்மையானவரும் ஆயுதம்தெரிந்த
களுக்குள்மேலானவருமாகிய துரோணரைநோக்கி, "கிருபரிருக்
டும். அவர், நான் எப்போதும் பூஜிப்பதற்கும் போஷிப்பதற்கு
ரியவர். நீர் என்னுடையபேரன்மார்களுக்குக் குருவாகஇரும். உம்
மத்தான் ஆசாரியராக நான்நினைக்கிறேன். இந்தக்குமாரர்களை அங்கீ
த்துக்கொள்ளும். இவர்களைஎப்போதும்வைத்துக்கொண்டு அஸ்
ங்கள்தெரிந்தவர்களாகச்செய்யக்கடவீர்" என்றுசொன்னார். மனி
களிற்சிறந்தவரும் மஹாபராக்ரமசாலியுமான துரோணர் பீஷ்ம
ல் கௌரவிக்கப்பட்டபிறகு கௌரவர்களின்கிருஹத்தில் அர்க்கிய
த்யம்முதலிய ஸத்காரமடைந்து களைப்பாறினார். அந்தக்குருவான
களைப்பாறினபின், பீஷ்மர், தம்பேரன்மார்களாகிய குருவம்சபுத்
ர்களையழைத்துக்கொண்டு பலவகைப்பொருள்களுடன் சிஷ்யர்க
கக்கொடுத்தார். பிரபுவாகியபீஷ்மர், வேண்டியபண்டங்களினால்
ம்மையாகநிரப்பப்பட்டதும் தனதானியங்கள் நிரம்பினதுமாகிய
டை மிகுந்தஸந்தோஷத்துடன் துரோணருக்குக்கொடுத்தார்.
தச்சிறந்தவில்லாளியான துரோணர் மனமகிழ்ந்து பாண்டுபுத்ரர்
ம் த்ருதராஷ்டிரபுத்ரர்களுமாகிய அந்தக்கௌரவர்களைச் சிஷ்யர்
ஏற்றுக்கொண்டார். துரோணர் ஸந்தோஷமடைந்து அவர்க
ல்லாரையும் அங்கீகரித்து யாருமில்லாமல் தாம்மட்டும்தனித்
க்கையில் பாதங்களில்வந்தனஞ்செய்த அவர்களைநோக்கி, "குற்
ற்றவர்களே! நான்விரும்பியகாரியம் ஒன்று என்னுள்ளத்தில்
டவிடாமலிருக்கிறது. நீங்கள் அஸ்திரங்களில்தேர்ந்தபின் என
அதை நிறைவேற்றவேண்டும். அதைப்பற்றிச் சொல்லுங்கள்"
றுசொன்னார். ஜனமேஜயராஜாவே! அதைக்கேட்டு அந்தக்
ரவர்கள் ஒன்றும்பேசாமலிருந்தனர். வீரரே! அர்ச்சுனன்மட்
அவர்கேட்டதையெல்லாம் வாக்குத்தத்தம் செய்தான். அதனால்,
ராணர் அப்போதே அர்ச்சுனனைப் பலமுறை உச்சிமோந்து அன்

புடன்தழுவிக்கொண்டு உடனே ஆனந்தக்கண்ணீர் சொரிந்தா துரோணர் அசுவத்தாமாவை அழைத்து, "அர்ச்சுனனே உனக்கு சிநேகிதனாக அறி. என்னால்கொடுக்கப்பட்ட இவனை நீ வாங்கி கொள்" என்றுசொன்னார். பாண்டுபுத்திரனாகிய அர்ச்சுனன், "ந லது, நல்லது" என்றுசொல்லி அசுவத்தாமாவைக்கட்டிக்கொண்( (துரோணரைப்பார்த்து,) "பிராம்மணச்ரேஷ்டரே! இன்றுமுதல் நீ யப்படி உமக்குஉட்பட்டவனாக இருக்கிறேன். நான் சிஷ்யன். பிராம் ணோத்தமரே! உமது அருளினால்ஜீவிக்கிறேன்" என்றுசொல்லி அ போதே (அவர்) பாதங்களைப்பிடித்துக்கொண்டான். பிறகு வீரா துரோணர் பாண்டவர்களுக்குத் தேவசம்பந்தமும் மனுஷ்யசம்ப முமாகிய அனேகவிதங்களான அஸ்திரங்களைக் கற்பித்தார். ப ச்ரேஷ்டரே! யாதவர்களும் அந்தகதேசத்தவரும் இன்னும்பலதே த்தவருமாகிய அனேகராஜகுமாரர்களும் ராஜாக்களும் வந்துசேர்ந் அஸ்திரவித்தைக்காகப் பிராமணச்ரேஷ்டரான துரோணரை அடை தார்கள். அப்போது தேரோட்டுகிறவனுக்கும் ராதையென்பவளு கும் புத்திரனாகிய கர்ணன் துரோணரைக் குருவாக அடைந்தா மிகவும்பெருமைக்காரனாகிய அந்தஸாரதியின்புத்திரன் அர்ச்சுன மீது பொறாமையுற்றுத் துரியோதனனிடம்சேர்ந்துகொண்டு பா டவர்களை அவமதித்தான். அதனால், அவன் தனுர்வேதம்கற்கவே ண்டும்என்கிறஆசையோடு துரோணரைஅடைந்தான். பாண்டுபு திரனாகிய அர்ச்சுனன் அப்பியாஸத்தினாலும் புஜபலத்தினாலும் விடா முயற்சியினாலும் அஸ்திரவித்தையிலுள்ளஆசையினாலும் அவர்கெ ல்லாரிலும் சிறப்புற்றவனானான். அர்ச்சுனன், அஸ்திரப்பிரயோக ஒன்றாயிருந்தும் லாகவமாகச்செய்வதிலும் செய்கைக்குத்தக்கப அங்கங்களை அமைத்துக்கொள்வதிலும் எல்லாச்சிஷ்யர்களிலும் மே லாக இருந்தான். துரோணர் உபதேசிக்குங்காலங்களில் இந்தி புத்திரனாகிய அர்ச்சுனனை ஒப்பற்றவனென்று நினைத்தார். இ வாறு எல்லாக்குமாரர்களுக்கும் பாணங்களையும் அஸ்திரங்களையு கற்பித்தார். துரோணர் காலதாமதமாக வரவேண்டுமென்பதை உ தேசித்தே எல்லாக்குமாரர்களுக்கும் * கமண்டலுவைக் கொடு தார். சீக்கிரம்வருவதை உத்தேசித்துத் தமதுபுத்திரனிடம் குட ஞைக்கொடுத்தார். அந்தக்குமாரர்கள் வருவதற்குள்ளாகவே த புத்திரருக்கு ரகஸ்யமானசெய்கையை உபதேசித்தார். அந்தச்செ கையை அர்ச்சுனன் ஊகித்துத்தெரிந்துகொண்டான். பிறகு அ

* குறுகிய வாயையுடையதாதலால் விரைவில் ஜலம் நிரம்பாதது.

ர்ச்சுனன் வாருணாஸ்திரத்தினால் கமண்டலுவைநிரப்பிக்கொண்டு சாரியபுத்திரனுடன்கூடவே ஆசாரியரிடம் வந்தான். சிறந்தபுத் யுள்ளவனும் அஸ்திரங்கள் தெரிந்தவர்களில் மேலானவனுமாகிய ந்தஅர்ச்சுனன், விசேஷங்களைத் தெரிந்துகொள்ளும் நருணங் ளில் அந்த ஆசாரியபுத்திரரைவிட்டுத் தனித்துப் பிரியவில்லை. அர்ச் னன் குருவைப்பூஜிப்பதில் மிகுந்த முயற்சியை எடுத்துக்கொண் ான்; அஸ்திரங்களிலும் அதிக ஊக்கம்வைத்தான்; துரோணருக் ப் பிரியமாகவுமிருந்தான். அர்ச்சுனன் பாணங்களைப்பற்றியும் அஸ் ிரங்களைப்பற்றியும் எப்போதும் முயற்சியோடிருப்பதைக்கண்டு, ரோணர் சமையற்காரனை அழைத்து ரகஸ்யமாக, "நீ ஒருபோதும் ர்ச்சுனனுக்கு இருட்டான இடத்தில் அன்னம்போடவேண்டாம். ப்படி நான்சொன்னதை நீ அருச்சுனனிடத்தில் சொல்லக்கூடாது" ன்றுசொன்னார். பிறகு ஒருகாலத்தில் அர்ச்சுனன் புசித்துக் காண்டிருக்கையில் காற்று மிகுதியாக அடித்தது. அதனால் அங் கு எரிந்துகொண்டிருந்த அந்தத்தீபம் அவிக்கப்பட்டது. அர்ச் னன் சாப்பிட்டுக்கொண்டே தானிருக்கிறான். அந்தத்தேஜஸ்வி ன அர்ச்சுனனுடையகை வாயைத்தப்பி வேறிடம்செல்லவில்லை. றந்தகைகளையுடைய அந்தப் பாண்டுபுத்திரனாகிய அர்ச்சுனன் அது ப்பாஸத்தால் உண்டானதென்று நினைத்து அப்பாஸத்தைச் செய் க்கருதி ராத்திரியிலும் விற்பயிற்சி செய்துகொண்டிருந்தான். பாா ரே! அவனுடையவில்லின்நாண் உள்ளங்கையில் உரைந்ததனு ண்டான சப்தத்தைக்கேட்டுத் துரோணர் எழுந்துவந்து அவனைத் ழுவிக்கொண்டு, "இந்தஉலகத்தில் உன்னைப்போன்ற வில்லாளி வெொருவன் இல்லாமலிருக்கும்படி பயிற்சிசெய்விக்கப்போகிறேன். தனை உனக்கு உண்மையாகச் சொல்லுகிறேன்" என்றுசொன்னார்.

பிறகு துரோணர் அர்ச்சுனனை மறுபடியும் குதிரைச்சண்டை லும் யானைச்சண்டையிலும் தேர்ச்சண்டையிலும் கால்நடையுத் த்திலும் பழக்கினார். துரோணர் கௌரவர்களுக்குக் கதாயுத்தத் லும் கத்திச்சிலம்பத்திலும் தோமரங்கள் ஈட்டிகள் சக்தியாயுதங் ள் ஆகிய இவற்றின்சிலம்பத்திலும் பலஆயுதங்கள்கலந்தசண்டை லும் கற்பித்தார். துரோணருடைய அந்தஸாமர்த்தியத்தைக்கேள் யுற்றுத் தனுர்வேதத்தைக்கற்க ஆவலுடன் ராஜாக்களும் ராஜகுமா ர்களும் ஆயிரக்கணக்காக வந்துசேர்ந்தனர். ஆயுததாரிகளிற்சிறந் வரான துரோணர் அவர்களெல்லாருக்கும் சிக்ஷைசொல்லிவைத் ார். மஹாராஜாவே! அதன்பின் வேடர்களுக்கு அரசனாகிய ஹிர

ண்யதனுஸ் என்பவனுடைய மகனான ஏகலவ்யனென்பவன் துரோ ணரிடம் வந்துசேர்ந்தான். தர்மந்தெரிந்த துரோணர் கௌரவ ரிடமுள்ள தாக்ஷிண்யத்தினால் சிந்தித்து அவன்வேடன்மகனென் சொல்லி அவனை வில்வித்தையில் சிஷ்யனாக அங்கீகரிக்காமலிருந்தா அவனைப்பார்த்து, "ஓ! நிஷாதபுத்திரனே! நீ எப்போதும் பாண பிரயோகத்தில் மிகுந்தபலமுள்ளவனாய்; என்சிஷ்யன்தான்; உ வீட்டுக்குத்திரும்பிச்செல்; உனக்கு அனுமதிகொடுத்தேன்" என் சொன்னார். வீரனாகிய அந்த ஏகலவ்யனோவெனின், துரோணருடை பாதங்களைச் சிரஸினால்வந்தனஞ்செய்து காட்டுக்குச்சென்று மன ணால் துரோணரைப்போல் (ஒருபதுமை) செய்து அதனிடத்தில் உய ந்த ஆசாரியனிடத்தில் செய்யவேண்டியவழிபாடுகளைச்செய்துகொ ண்டு சிறந்தநியமத்துடன் அப்போதுமுதல் பாணங்களிலும் அஸ் ரங்களிலும் பயிற்சிசெய்யத்தொடங்கினான். அவன் மிகுந்தசிரத்தை யோடும் சிறந்தஅப்பாஸத்தோடும் பாணத்தைஎடுப்பதிலும் தொடு பதிலும் விடுப்பதிலும் மிகுந்தலாகவத்தையடைந்தான்; லாகவத்தை யும் அஸ்திராப்யாஸத்தையும் சீக்கிரமாகத் தெரிந்துகொண்டான் பிறகு ஒருகாலத்தில் பகைவர்களை அழிப்பவர்களாகிய கௌரவர் ளும்பாண்டவர்களுமாகிய அனைவரும் துரோணரால் அனுமதிகொடு கப்பெற்றுத் தேர்களிலேறி வேட்டைக்குப்புறப்பட்டனர். ராஜாவே அப்போது ஒருமனிதன் ஆயுதங்களையெடுத்துக்கொண்டும் ஒரு நாயைஅழைத்துக்கொண்டும் தனியாகப் பாண்டவர்களின்பின்செல் றான். அவர்கள் பற்பலஆயுதக்கிரியைகளைச்செய்யக்கருதி அந்தவனத் தில் ஸஞ்சரிக்கையில் வழியோடுவிளையாடிக்கொண்டுஸஞ்சரித்த அ நாய் வேடச்சிறுவனிடம் சென்றது. அந்தநாய் கறுத்தவனும் உடம் பில் அழுக்கைப்பூசிக்கொண்டவனும் மான்தோலையும் ஜடையையு தரித்தவனுமாகிய வேடச்சிறுவனைக்கண்டு குரைத்துக்கொண்டு அவ னருகில்நின்றது. அவன் அப்போது அஸ்திரப்பிரயோகத்தில் தன்னு டைய லாகவத்தைக்காண்பித்து அந்தக் குரைக்கின்றநாயின்வாயில் ஏழுபாணங்களை ஒருகொத்தாகவிடுவதுபோல்விடுத்தான். அந்தநாய் பாணங்களினால் நிரப்பப்பட்டவாயுடன் பாண்டவர்களிடம்வந்தது. வீரர்களானபாண்டவர்கள் அதைக்கண்டு மிகுந்த ஆச்சரியம்கொண் டனர். அவனுடைய உயர்ந்தலாகவத்தையும் சத்தத்தினால்குறியை அடிப்பதையும்கண்டு அவர்களனைவரும் நாணமுற்றனர். அவனைச் சிலாகிக்கவும்சிலாகித்தனர். ராஜாவே! அப்போது அந்தப்பாண்ட வர்கள் வனத்தில்தேடி இடைவிடாமல் சரங்களைவிடுத்துக்கொண்

ருக்கும் அந்தவேடனைக்கண்டனர். பார்வைக்கு விகாரமாயிருக்கும்
வனை அவர்கள் இன்னானென்றறியவில்லை. அதனால், "நீயார்?"
ன்றும், "யாருடையவன்?" என்றும்கேட்டனர். அவன், "வீரர்
ளே! வேடர்க்கரசனாகிய ஹிரண்யதனுஸ்என்பவனுடையபுத்திர
னென்றும், தனுர்வேதத்தில் அப்பியாஸம்செய்துகொண்டிருக்கும்
ரோணசிஷ்யனென்றும் என்னையறியுங்கள்" என்றுசொன்னான்.
ந்தப்பாண்டவர்கள் அவனைச்சரியாகத்தெரிந்துகொண்டு திரும்பி
ந்து வனத்தில்நடந்தஆச்சரியமெல்லாவற்றையும் நடந்தபடி துரோ
ருக்கு உரைத்தனர். ராஜாவே! குந்திபுத்திரனாகிய அர்ச்சுனன்
ட்டும் ஏகலவ்யனையேநினைத்துக்கொண்டு ஏகாந்தத்தில் துரோண
டம்சென்று ஸ்நேகத்துடன், "ஐயா! நீங்கள் என்ஒருவனை அன்
டன்தழுவிக்கொண்டு, 'உனக்கு மேற்பட்டசிஷ்யன் எனக்கில்லை' என்
சொல்லைச்சொன்னீர்கள். அப்படியிருக்க நிஷாதராஜன்புத்ரன் என்
ாவிடவும் லோகத்தைவிடவும் சிறந்தபராக்கிரமமுள்ள வேறொரு
ஷ்யனாக உங்களுக்கிருப்பது எவ்வாறு?" என்றுகேட்டான். துரோ
ர் அந்தவிஷயத்தைப்பற்றிச் சற்றுநேரம்சிந்தித்துப்பார்த்து அர்ச்
னனையழைத்துக்கொண்டு நிஷாதபுத்ரனிடம்சென்றார். சரீரமெல்
ாம் அழுக்குப்படிந்து ஜடைதரித்து மரவுரியுடுத்து வில்லும்கையு
ாக இடைவிடாமல்சரங்களைவிடுத்துக்கொண்டிருக்கும் ஏகலவ்ய
ாக்கண்டார். ஏகலவ்யன் அருகில்வரும் துரோணரைக்கண்டு எதிர்
காண்டுபோய்ப் பாதங்களைப்பிடித்துக்கொண்டு பூமியில் தலைபட
ந்தனஞ்செய்தான். பிறகு அந்தநிஷாதபுத்ரன் துரோணரைக் கிர
ப்படிபூஜித்துத் தன்னைச் சிஷ்யனென்றுதெரிவித்துக் கைகூப்பி
வர்முன்நின்றான். ராஜாவே! பிறகு துரோணர் ஏகலவ்யனைநோக்கி,
வீரனே! நீ என்சிஷ்யனாயின் எனக்குக் குருதக்ஷிணைகொடுக்கவே
ாடும்" என்றுசொன்னார். ஏகலவ்யன் அதைக்கேட்டுச் சந்தோஷத்
டன், "பகவானே! நான் என்னகொடுக்கவேண்டும்? குரு எனக்
க்கட்டளையிடவேண்டும். சிறந்தபிரம்மஜ்ஞானியே! குருவுக்குக்
காடுக்கத்தகாதது எனக்கொன்றுமில்லை" என்றுசொன்னான். துரோ
ர், அவனை, "நீ வலக்கைக்கட்டைவிரலைக் கொடுக்கவேண்டும்"
ன்றுசொன்னார். எப்போதும் ஸத்தியந்தவறாதவனாகிய ஏகலவ்யன்
ரோணருடைய அந்தக்கொடுஞ்சொல்லைக்கேட்டுத் தன்சொல்லைக்
ாப்பாற்றுவதற்காக முன்போலவே மலர்ந்தமுகத்தோடும் முன்போ
வே உற்சாகமுள்ளமனத்தோடும் ஒன்றும்சிந்திக்காமல் தனது அந்த
லக்கைக்கட்டைவிரலை வெட்டித் துரோணருக்குக் கொடுத்தான்.

அதன்பின் அந்தவேடன் பாணத்தை மற்றைவிரல்களால் இழுத்து விட்டான். ராஜாவே! முன்னிருந்ததுபோல் விரைவாக இருக்கவில்லை. பிறகு அர்ச்சுனன் மனமகிழ்ந்து ஜ்வரம்விட்டவனானன். துரோணரும் சொல்தவறாதவரானார். மற்றொருவன் அர்ச்சுனனை வெல்லப்போவதில்லை. எப்போதும் சிறிணமனமுள்ள துரியோதனனும் பீமனும் அப்போது துரோணருக்குக் கதைப்பயிற்சியுள்ள சிஷ்யர்களாயிருந்தனர். அசுவத்தாமா * ரகஸ்யங்களெல்லாவற்றிலும் மேலாக இருந்தார். அப்படியே இரட்டையாகிய நகுலஸஹதேவர்களிருவரும் மற்றவீரர்களைக்காட்டிலும் மேலான சிலம்பக்காரர்களாக இருந்தனர். யுதிஷ்டிரர் தேர்ச்சண்டையில் சிறந்தவரானார். அர்ச்சுனன் எல்லாவற்றிலும் புகழ்பெற்றுக் கடல்சூழ்ந்தஉலகத்தில் தேராளிகளின் அதிபதிகளுக்கும் அதிபதியாகியும், புத்தியிலும் யோகசக்தியிலும் பலத்திலும் உற்சாகத்திலும் எல்லா அஸ்திரங்களிலும் தேர்ச்சியடைந்தவனாகியும் அஸ்திரவித்தையிலும் குருபக்தியிலும் எல்லாரிலும்மேலாக இருந்தான். அஸ்த்ரோபதேசம் எல்லாருக்கும் ஒன்றாக இருந்தும் அந்தவீரனாகிய அர்ச்சுனன் ஒருவன் அவயவங்களின் அமைப்பினால் எல்லாக்குமாரர்களிலும் மேலானவீரனாக இருந்தான். பலத்தில் அதிகரித்தபீமஸேனன்மேலும் வித்தையில்தேர்ந்த அர்ச்சுனன்மேலும் துராத்மாக்களாகிய திருதராஷ்டிரபுத்திரர்கள் ஒன்றுசேர்ந்து பொறாமையுற்றனர். எல்லாவித்தைகளிலும் அஸ்திரங்களிலும் கற்றுணர்ந்த அவர்களெல்லாரையும்கூட்டிப் புருஷச்ரேஷ்டராகிய துரோணர் லக்ஷ்யத்தைஅடிக்கும்விஷயத்தில் பரீக்ஷைசெய்யக்கருதி, குமாரர்களுக்குத்தெரியாமல் சிற்பிகளாற்செய்யப்பட்ட ஒரு †பாஸபக்ஷியைப்போன்றபதுமையை மரத்தின்நுனியிலேற்றி அதை அவர்களுக்குக் குறியாகக்காண்பித்தார். "நீங்களனைவரும் சீக்கிரமாக வில்லுகளெல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு அம்புகளைத்தொடுத்து இந்தப்பாஸம் என்னும்பக்ஷியைக்குறியிட்டு நில்லுங்கள். என்சொல் புறப்படுங்காலத்தில் இதன்சிரஸைத் தள்ளிவிடவேண்டும். ஒவ்வொருவனுக்குக் கட்டளையிடுவேன். புத்திரர்களே! அவ்வாறு செய்யுங்கள்" என்று துரோணர் சொன்னார்.

பிறகு அங்கிரஸ்வம்சத்தாரில்சிறந்தவராகிய துரோணர் முதலில் யுதிஷ்டிரரைநோக்கி, "ஜயிக்கக்கூடாதவீரனே! பாணத்தைத்தொடு! என்சொல்லின்முடிவில் அதைவிடு" என்றார். குருவின்வாக்கியத்தினால் தூண்டப்பட்ட வீரரானயுதிஷ்டிரர் உடனே முதலில் வில்லையெடு

* மந்திரத்தியானமுதலியவை. † கள்ளிக்காக்கை.

துப் பாஸபக்ஷியைக்குறிவைத்து நின்றார். பரதச்ரேஷ்டரே! பிறகு த்ரோணர், வில்லைவளைத்துக்கொண்டிருக்கும் அந்தக்கௌரவ்புத்திர ரகிய யுதிஷ்டிரரைநோக்கிச் சற்றுநேரம்பொறுத்து, "ராஜகுமாரனே! மரத்தின் நுனியிலிருக்கும் பாஸபக்ஷியை நீ பார்க்கிறாயா?" என்று கேட்டார்.' யுதிஷ்டிரர், "பார்க்கிறேன்" என்று ஆசாரியருக்கு மறுமொழிசொன்னார். மறுபடியும் சற்றுநேரம்பொறுத்துத் த்ரோணர், "இந்தமரத்தையும் என்னையும் உன்சகோதரர்களையும் பார்க்கிறாயா?" என்று யுதிஷ்டிரரைக்கேட்டார். அதற்கும் அந்த் யுதிஷ்டிரர், "இந்தமரத்தையும் உங்களையும் என்ஸஹோதரர்களையும் பாஸபக்ஷியையும் பார்க்கிறேன்" என்று பலமுறைசொன்னார். த்ரோணர் மனத்தில்அத்ருப்தியுடன், "இந்தலக்ஷ்யம் உன்னால் அடிக்க முடியாது" என்றிகழ்ந்து, அவரைப்போகும்படிசொன்னார். பெரும் புகழ்பெற்ற துரோணர் பிறகு மற்றச்சிஷ்யர்களாகிய துரியோதனன் முதலான த்ருதராஷ்டிரபுத்திரர்களையும், பீமன்முதலியவர்களையும், அன்னியதேசத்து அரசர்களையும் பரீக்ஷிப்பதற்கு யுதிஷ்டிரரைக்கேட்ட முறையாகவேகேட்டார். எல்லாரும் எல்லாவற்றையும் பார்க்கிறோமென்று சொன்னபோது, அவர்கள் அவரால்நிந்திக்கப்பட்டார்கள்.

---

## நூற்றுநாற்பத்துமூன்றுவது அத்தியாயம்.

## ஸம்பவ்பர்வம். (தொடர்ச்சி.)

(குறிவைத்த பாஸபக்ஷியை அர்ச்சுனன் சேதித்ததும், அவன் முதலையைக்கொன்று துரோணரை விடுவித்ததும், துரோணர் அவனுக்கு பிரம்மசிரஸ் என்னும் அஸ்திரத்தைக் கொடுத்ததும்.)

பிறகு த்ரோணர் சிரித்துக்கொண்டு அர்ச்சுனனைப்பார்த்து, "நீ இப்போது அடிக்கவேண்டியது; இந்த லக்ஷியத்தைப்பார்; நான் சொல்லுகிறகாலத்தில் பாணம் விடவேண்டியதாயிருக்கும்; புத்திரனே! தனுஸை வளைத்துக்கொண்டு சற்றுநேரம் ஸரியாகநில்" என்றுசொன்னார். இவ்வாறுசொல்லப்பட்ட ஸவ்யஸாசி வில்லை மண்டலமாக வளைத்துக்கொண்டு குருவின்சொல்லினால் தூண்டப்பட்டுப் பாஸபக்ஷியைக் குறிவைத்து நின்றான். சற்றுநேரம் பொறுத்துத் த்ரோணர் அவனையும் முன்போலவே, "அர்ச்சுனா! இங்கிருக்கும் இந்தப் பாஸபக்ஷியையும் மரத்தையும் என்னையும் பார்க்கிறாயா?" என்றுகேட்டார். பாரதரே! "பாஸம் ஒன்றைமட்டும் பார்க்கிறேன்;

மரத்தையும் பார்க்கவில்லை; உங்களையும் பார்க்கவில்லை" என்று துரோணரைப்பார்த்து மறுமொழிகூறினன். பிறகு ஜயிக்கமுடியாதவராகிய துரோணர் மனத்தில் திருப்தியடைந்து சற்றுநேரம் பொறுத்துத் திரும்பவும் பாண்டவர்களுக்குள் மஹாரதனாகிய அந்த அர்ச்சுனனைநோக்கி, "நீ இந்தப்பாஸபக்ஷியைப் பார்க்கிறாயாயின் அந்தச்சொல்லை மறுபடியும் சொல்" என்றுகேட்டார். அவன் "பாஸத்தின் சிரஸைப்பார்க்கிறேன். உடலைப்பார்க்கவில்லை" என்று மறுமொழிகூறினன். அர்ச்சுனனால் இவ்வாறு சொல்லப்பட்டது துரோணர் மயிர்க்கூச்சலெடுத்தவராகி அர்ச்சுனனைநோக்கி, "விடு" என்றுசொன்னார். அவன் உடனே விட்டுவிட்டான். அப்போது அந்தப்பாண்டவன் மரத்திலிருக்கும் அந்தப் பாஸபக்ஷியின்தலையைக் கூர்மையான அர்த்தசந்திரபாணத்தினால் அறுத்து வேகமாகக் கீழே தள்ளினன். அந்தச்செய்கை நிறைவேறினவுடன் துரோணர், அர்ச்சுனனைக் கட்டிக்கொண்டார்; யுத்தத்தில் துருபதனை ஸேனையோடு கூடத் தோற்கச்செய்யத் தக்கவனாக நினைத்தார்.

பரதஸ்ரேஷ்டரே! அதன்பிறகு சிலகாலத்திற்கெல்லாம் அங்கிரஸ்வம்சத்தவரிற் சிறந்த துரோணர் சிஷ்யர்களுடன்கூட ஸ்நானஞ்செய்யக் கங்கையைநோக்கிச் சென்றார். பிறகு ஜலத்தில் அமிழ்ந்த துரோணாசாரியரை ஜலத்தில்ஸஞ்சரிக்கும் பலமுள்ள ஒரு முதலை காலத்தினால்ஏவப்பட்டுக் கணைக்காலில் பிடித்தது. அவர் விடுவித்துக்கொள்ள வல்லவராயிருந்தும், "முதலையைக்கொன்று என்னைச் சீக்கிரம் விடுவியுங்கள்" என்று சிஷ்யர்களெல்லாரையும் துரிதப்படுத்தி ஏவினார். அவர் சொல் புறப்படுங்காலத்திலேயே அர்ச்சுனன் தடுக்கமுடியாத கூர்மையான ஐந்து அம்புகளினால் நீருக்குள் மூழ்கியிருந்த முதலையை அடித்தான். அப்போது மற்றவர்கள் ஒன்றும் தோன்றாமல் அங்குமிங்கும் ஓடினார். கிரியையுள்ள அந்த அருச்சுனனைக்கண்டு துரோணர் எல்லாச்சிஷ்யர்களிலும் சிறந்தவனென்று நினைத்து அப்போது மிகுந்ததிருப்தியுள்ளவரானார். அர்ச்சுனன் பாணங்களினால் அநேகம்துண்டுகளாகச்செய்யப்பட்ட அந்தமுதலை மஹாத்மாவான துரோணருடைய கணைக்காலைவிட்டுவிட்டு மரணமடைந்தது. எல்லாச்செய்கைகளையும் தெரிவிப்பதற்காகச் சிஷ்யர்களைவரவழைத்தார். சிறந்தபராக்கிரமமுள்ள துரோணர் துரியோதனனையும் சித்திரஸேனனையும் துச்சாஸனனையும் விவிம்சதியையும் அர்ச்சுனனையும் அசுவத்தாமாவையும் அழைத்து மண்ணால் ஒருகுழந்தைசெய்வித்துச் சிஷ்யர்கள் பார்த்திருக்கையில் கங்கையில் போட்

டார். கண்களைத் துணியினால்கட்டிவிட்டு வில்லைக்கொடுத்தார். "கண் கட்டினபடியே ஜலத்திலிருக்கிற இந்தக்குழந்தையை அடியுங்கள்" என்றார். உடனே ஸமர்த்தனான அர்ச்சுனன், ஜலத்தில்மூழ்கியிருந்த கிசுப்பதுமையைப் பதினைந்துபாணங்களினால் அடித்தான். அந்தக் கிரியைகளெல்லாவற்றையும்பார்த்துத் துரோணர் எல்லாச்சிஷ்யர்களி லும் அர்ச்சுனனைச் சிறந்தவனாகநினைத்தார். அப்போது மிகுந்த ஸந் தோஷமடைந்தார். பிறகு துரோணர், மஹாரதனும் மஹாத்மாவு மாகிய அர்ச்சுனனைநோக்கி, "சிறந்தகைகளையுடையவனே! சிறப் புள்ளதும் தாங்குவதற்கு மிகஅஸாத்தியமுமாகிய இந்த, 'பிரம்ம சிரஸ்' என்னும் அஸ்த்ரத்தைப் பிரயோகஸம்ஹாரங்களோடும் பெற் றுக்கொள். நீ இதை எவ்வகையிலும் மனிதர்களின்மேல் பிரயோகிக் காதே; அற்பசக்தியுள்ளவன்மேல் பிரயோகித்தால் இஃது உலகத்தை எரித்துவிடும். குழந்தாய்! இந்தலோகங்களில் இந்தஅஸ்த்ரம் நிக ரற்றதென்று சொல்லப்படுகின்றது. அதை நியமத்துடன் தரித்துக் கொள். நான் இனிச்சொல்லப்போகிறசொல்லையும் கேள்; வீரனே! யுத்தத்தில் மனிதரல்லாத தேவர்முதலிய சத்துருக்கள் எவராயினும் உன்னைவருத்துவாராயின் அப்போது அவரை வதஞ்செய்வதற்கு இந்தஅஸ்திரத்தைப் பிரயோகஞ்செய்" என்றுசொன்னார். அந்த அர்ச்சுனன் அப்படியேயென்று பிரதிஜ்ஞைசெய்து கைகூப்பி அந்த மேலானஅஸ்திரத்தைப்பெற்றுக்கொண்டான். குரு மறுபடியும் அவ னைநோக்கி, "உலகத்தில் உன்னைப்போன்றவில்லாளி மற்றொருபுரு ஷன் இரான்" என்றுசொன்னார்.

---

## நூற்றுநாற்பத்துநான்காவது அத்தியாயம்.

---

### ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)

---

(துரோணருடைய சிஷ்யர்களைப் பரீக்ஷிப்பதற்காக ஒரு சிலம்பக்கூடஞ் செய்து அதைச்சேர்ந்த காட்சிமண்டபத்தில் பீஷ்மர்முதலியவர்கள் பிரவேசித்ததும், சிஷ்யபரீக்ஷையும், பீமனையும், துரியோ தனனையும் கதாயுத்தத்தில் பரீக்ஷித்ததும்.)

பாரதரே! ராஜாவே! துரோணர், திருதராஷ்டிரபுத்திரர்களும் பாண்டுபுத்திரர்களும் அஸ்த்ராப்பியாஸத்தில் தேர்ந்திருப்பதையறிந்து கிருபர், ஸோமதத்தன், புத்திமானான பாஹ்லிகன், பீஷ்மர், வியா ஸர், விதுரர் இவர்களுடைய முன்னிலையில் த்ருதராஷ்டிர மஹாராஜா

ணைப்பார்த்து, "ராஜாவே! குருச்ரேஷ்டனே! உனதுகுமாரர்கரு
க்கு வித்தைவந்திருக்கிறது. ராஜாவே! உன் அனுமதியின்மே
அவர்கள் தங்கள் கல்வியைக் காண்பிக்கக்கடவர்" என்றுசொன்ன
பிறகு திருதராஷ்டிரமஹாராஜன் மனமகிழ்ந்து, "பாரத்வாஜபு
ரரே! பிராமணச்ரேஷ்டரே! நீர் பெரியகாரியம் செய்திருக்கிறீ
நீங்கள் எந்தக்காலத்தையும் எந்த இடத்தையும் என்னஎன்ன வ
யான செய்கையையும் நினைக்கிறீர்களோ அவற்றையெல்லாம் அவ்வ
ருகச்செய்யும்படி நீங்களே எனக்குக் கட்டளையிடுங்கள். இப்போது
எனக்குள்ள துக்கத்தினால், அஸ்த்ரவிஷயத்தில் பராக்ரமத்தைச்செ
யும் என்புத்திரர்களை எவர்கள்காண்பார்களோ அந்தக்கண்ணை
பெற்றமனிதர்கள்மேல் நான் ஆசையுள்ளவனாகவிருக்கிறேன். விது
ரனே! பெரியவராகிய ஆசாரியர் எதைச்சொல்லுகிறாரோ அதை அ
படியேசெய். தர்மத்தில்விருப்பமுள்ளவனே! இவ்வகையானபிரிய
இனிவருமென்று நான்நினைக்கவில்லை" என்றுசொன்னான். பிற
சிறந்தபுத்திமானாகிய துரோணாசாரியர் த்ருதராஷ்டிரமஹாராஜ
னிடத்திலும் விதுரரிடத்திலும் அனுமதிபெற்றுக்கொண்டு மே
பள்ளமில்லாமலும் மரங்களில்லாமலும் புதர்களில்லாமலும் வடக்கே
தாழ்ந்துமிருக்கிற அழகான ஓரிடத்தை அளக்கச்செய்தார். நல்
நக்ஷத்திரத்தோடுகூடியதிதியில் அந்தப்பூமியில் பலியைச்செய்தார்
பரதச்ரேஷ்டரே! அந்தப்பலிக்காகப் பட்டணமுழுதும் பறையடி
கப்பட்டது. பெயர்பெற்றசில்பிகள் சிலம்பம்செய்யுமிடத்தில் மிக்
விசாலமும் சாஸ்திரத்தில்சொன்னபடி ஸரியாக வகுக்கப்பட்டது
மான காட்சிச்சாலையைத் துரோணாசாரியர்கட்டளைப்படி செய்தனர்
ராஜாவே! தேசத்திலுள்ளஜனங்கள், அவ்விடத்தில் ஸ்திரீகளுக்கா
எல்லாஆயுதங்களோடுங்கூடியகாவல்களையும், அகலமும்உயரமுமுள்ள
மஞ்சங்களையும் மிகுந்தவிலைபெற்றபல்லக்குக்களையும் செய்வித்தனர்
பிறகு அந்தக்குறிப்பிட்டதினம் வந்தபோது திருதராஷ்டிரமஹா
ராஜா, வியாஸரிடம் அனுமதிபெற்று, ஸபையாரோடும் அந்தப்பு
ஸ்திரீகளோடும் மந்திரிகளோடும் பீஷ்மரையும் ஆசாரியர்களிற்சிறந்த
கிருபரையும்முன்னிட்டுக்கொண்டும் பாஹ்லீகனையும் ஸோமதத்தனை
யும் பூரிஸ்ரவஸையும் மற்றக்கௌரவர்களையும் ஸஹாயமாகஅழைத்
துக்கொண்டும் பிராமணர்களுடன்கூட நகரத்திற்குவெளியில் சிலம
பஞ்செய்யுமிடம்சேர்ந்து, சுற்றிலும் முத்துச்சரங்கள்தொங்கவிட
பட்டதும் வைடூரியங்களினாலும் ரத்நங்களினாலும் பிரகாசிப்பதும
பொன்மயமும் அற்புதமுமான காட்சிச்சாலையை அடைந்தான்.

ஜயிக்கிறவர்களிற் சிறந்தவரே! மிகுந்த பாக்கியமுள்ள காந்தாரி
ம் குந்தியும் மற்றுமுள்ள ராஜஸ்திரீகளனைவரும், தாதிகளோடும்
ருதுகளோடும் தேவஸ்திரீகள் மேருவின்மேல் ஏறுவதுபோல்,
ஸந்தோஷத்தோடு மஞ்சங்களின்மேல் ஏறினர். பிராமணர்கள், க்ஷத்
ரியர்கள்முதலிய நான்குவருணத்தார்களும் ராஜகுமாரர்களுடைய
யுதப்பயிற்சியைப் பார்க்கக்கருதிப் பட்டணத்திலிருந்து விரைவாக
ந்தனர். பார்க்கவிரும்பின ஜனங்கள் ஒருநொடியில் அங்கே ஓரி
த்திற் சேர்ந்தனர். அப்போது அந்த ஸபையானது செவ்வையாக
சிக்கப்பட்ட வாத்தியங்களாலும் ஜனங்களின் உத்ஸாகத்தினாலும்
பருங்கடல் கலங்கினதுபோலிருந்தது. பிறகு, வெண்மையான
டையையுடுத்தினவரும் வெளுப்பான யஜ்ஞோபவீதம் தரித்தவ
ம் வெளுத்ததலைமயிரோடு வெளுப்பான மீசைதாடிகளையுடையவ
ம் வெளுத்த புஷ்பசந்தனங்களை அணிந்தவருமாகிய அந்தத்
ரோணாசாரியர், மேகங்களால் விடுபட்ட ஆகாயத்தில் அங்காரக
டன் சந்திரன் பிரவேசிப்பதுபோற் சிலம்பக்கூடத்தின் நடுவில்
புத்திரருடன்கூடப் பிரவேசித்தார். பலவான்களிற் சிறந்ததுரோ
ர் வ்யாஸருடைய அனுமதியைப் பெற்றுக்கொண்டு சிலம்பக்கூடத்
ற்குப் பூஜைசெய்தார். மந்திரங்களைச் செவ்வையாக அறிந்த பிரா
ணர்களைக்கொண்டு மங்களகாரியங்களைச் செய்வித்தார். த்ருதராஷ்
ரமஹாராஜா துரோணருக்கும் கிருபருக்கும் பொன்னையும் ரத்தி
ங்களையும் முத்துக்களையும் பலவகை வஸ்திரங்களையும் தக்ஷிணை
கக் கொடுத்தான். ஸுகத்தைத் தரத்தக்கதும் புண்ணியமுமான
ண்ணியாஹவாசனத்தைச் செய்தபிறகு, வேலைக்காரர்கள் பலவகை
ான ஆயுதக்கருவிகளை எடுத்துக்கொண்டு வந்தனர். அதன்
றகு மஹாரதர்களும் பரதச்ரேஷ்டர்களுமாகிய ராஜகுமாரர்கள்,
*விரல்களில் கவசங்களை அணிந்து கச்சைகளையும் தூணிகளையும்
டிக்கொண்டு வில்லுகளையெடுத்துக்கொண்டு பிரவேசித்தனர்.
ந்தப் புருஷச்ரேஷ்டர்கள் அரங்கத்தின்நடுவிலிருந்து துரோண
க்கு அபிவாதனஞ்செய்து, துரோணாசாரியருக்கும் கிருபாசாரியரு
ம் முறைப்படி மரியாதைசெய்தனர். அவர்களால்செய்யப்பட்ட
சீர்வாதங்களினால் கௌரவர்களெல்லாரும் மனத்தில்ஸந்தோஷ
டைந்து திரும்பவும் வந்தனஞ்செய்து முன்னமேபூஜைசெய்யப்பட்
ருந்த அஸ்திரங்களைச் செஞ்சந்தனத்தினாலும் பூஜைக்குரியபுஷ்பங்க
ாலும் தாங்களே பூஜித்தனர். செஞ்சந்தனம் பூசிக்கொண்டவர்களும்

* உடும்புத்தோலினால் செய்யப்பட்ட விரலுறை.

சிவந்தமாலைகள் தரித்தவர்களும் சிவந்தகொடிகள் பிடித்தவர்களு சிவந்தகடைக்கண்களுடையவர்களும் மாற்றுயர்ந்த பொன்னுபரண களணிந்துகொண்டவர்களும் பற்பலரூபங்களோடுகூடியவர்களுமா கிய அந்தக்கௌரவவீரர்களனைவரும் துரோணரால் அனுமதிகொடு கப்பெற்று ஆயுதங்களையெடுத்துக்கொண்டனர். முதலில் விற்களை எ த்து நாணேற்றிட்டு அம்புகளைத்தொடுத்து நாண்சப்தத்தையும் உள்ள கைச்சப்தத்தையுஞ்செய்து, அதனால் ஜனங்களை மூர்ச்சிக்கச்செ தனர். யுதிஷ்டிரர்முதலிய சிறந்தபராக்ரமமுள்ள அந்தராஜகுமா கள் அங்கே ஜ்யேஷ்டன்முதலாக வரிசைப்படி மிகவியக்கத்தக ஆயுதப்பயிற்சியைச்செய்தனர். ராஜாவே! அந்தஸபையில் சிலருடை யபூமாலைகளில் அம்புகள் விழுந்தன. சிலர் தலையிற்சூட்டிக்கொண் புஷ்பங்களில் பாணங்கள்விழுந்தன. சிலர் தங்கள்பெயரடையா முள்ள பலவகைப்பாணங்களை லாகவமாகவிட்டுப் பெரியவையும்சிறி வையுமானகுறிகளை அடித்தனர். சிலமனிதர்கள் பாணம்விழுமென் பயத்தினால் தலைகுனிந்தனர். இன்னும்சிலமனிதர்கள் பயமற்று ஆ சரியத்துடன்பார்த்திருந்தனர். அந்தக்குமாரர்கள் குதிரைகளிலேறி கொண்டு தங்கள்பெயர் அடையாளங்களினால்விளங்குகின்ற பலவகை ப்பாணங்களை லாகவமாகவிட்டு லக்ஷியங்களை விரைவில் அடித்தன பாணங்களையும் வில்லுகளையும் தரித்துக்கொண்டிருக்கும் அந்த குமாரர்களின்கூட்டம் கந்தர்வநகரம்போலிருந்ததைக்கண்டு அங்கு ளஜனங்கள் திகைத்திருந்தனர். பாரதரே! அங்கே லக்ஷக்கண கானமற்றஜனங்கள் ஆச்சரியத்தினால் மலர்ந்தகண்களோடு நல்ல, நல்லதென்று விரைவாகக்கூவினர். மிகுந்தபலமுள்ள அந்தராஜகுமா ரர்கள் தேர்கள்மேலும் யானைகள்மேலும் குதிரைகள்மேலும்ஏறி வி யுத்தத்திலும் கைச்சண்டையிலும் பல்வழிகளைச்செய்துகாண்பித்த மறுபடியும் கத்திகேடகங்களைப்பிடித்து யுத்தஞ்செய்து கத்திச்சில பத்தின்வழிகளையுஞ்செய்து உபதேசப்படி எல்லாஇடங்களிலும் ஸஞ் சரித்தனர். அந்தக்குமாரர்களெல்லோருக்கும் கத்திகேடகங்க ளுள்ள லாகவத்தையும் அங்க அமைப்பையும் திருத்தத்தையும் நின் நிலைதவறாமையையும் பிடித்தபிடிவிடாமையையும் ஸமயத்தில் ப்ரயோ கிப்பதையும் அங்குள்ளஜனங்கள்பார்த்தனர். பிறகு எப்போது உற்சாகமுள்ள துரியோதனனும் பீமஸேனனும் கைகளில்கதைகளை யெடுத்துக்கொண்டு ஒற்றைக்கொடுமுடியுள்ள இரண்டுமலைகள்போ பிரவேசித்தனர். சிறந்தகைகளையுடையவர்களும் பராக்கிரமம்தவறா வர்களுமாகிய அவ்விருவர்களும் கச்சைகட்டிக்கொண்டு ஒரு பெ

...ணக்காக மதங்கொண்ட இரண்டுபெரியயானைகள்போவதுபோலப் ...ாயினர். மஹாபலசாலிகளான அவ்விருவரும் மண்டலசஞ்சாரத் ...யாரம்பித்து மதமுள்ள இரண்டுயானைகளைப்போல் வலமும் இடமு ...க அநேகமண்டலங்கள் சுற்றினர். திருதராஷ்டிரனுக்கு விதுர ...ம், காந்தாரிக்குக் குந்தியும் குமாரர்களின் அந்தச்செய்கையையெல் ...ம் தெரிவித்தனர்.

---

## நூற்றுநாற்பத்தைந்தாவது அத்தியாயம்.

---

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)

---

(அர்ச்சுனனைப் பரீக்ஷித்தபோது சிலம்பக்கூடத்தில் கர்ணன் ப்ரவேசித்தது.)

குருராஜனாகிய துரியோதனனும் பலவான்களிற்சிறந்த பீம ...னனும் களத்திலிருக்கும்போது அவர்களிடம் பக்ஷபாதத்தினால் ...னகம்வைத்த ஜனங்கள் இரண்டுவகையாகப் பிரிந்தனர். "குரு ...ராவே! ஜயம்பெறு" என்றும், "பீமனே! ஜயம்பெறு" என் ...ம் மனிதர்களுடைய பெருங்கூச்சல்கள் உடனே எழுந்தன. பிறகு ...ந்தபுத்தியுள்ள துரோணர் கலங்கின கடலைப்போலிருந்த ஸபை ...க்கண்டு தமது அன்புள்ளபுத்திரராகிய அசுவத்தாமாவைநோக்கி, ...ந்த இரண்டு மஹாவீரர்களையும் அடக்கு; இருவரும் பயிற்சியில் ...ர்ந்தவர். பீமனுக்காகவும் துரியோதனனுக்காகவும் அரங்கத் ...கு இந்தக்கலக்கம் உண்டாகக்கூடாது" என்றுசொன்னார். பிறகு ...வத்தாமா விரைவாகஎழுந்து, "பீமா! குருவின் ஆஜ்ஞை" என் ...ம், "துரியோதனா! குருவின்கட்டளை" என்றும்சொல்லி "உங்க ...ருக்குக் குருவின் உபதேசத்தினால் உண்டானவேகத்தையும் ஸாக ...த்தையும் காண்பித்ததுபோதும்" என்று தடுத்தார். பிறகு ஓங் ...கதைகளோடுகூடிய அவ்விருவரும் பிரளயகாலத்துக்காற்றினால் ...ரந்தளிக்கின்ற இரண்டுகடல்கள் பெருங்கரைகளுக்கடங்குவது ...ால், குருபுத்ரராகிய அசுவத்தாமாவினால் அடக்கப்பட்டனர்.

அதன்பின் துரோணர் ஸபையின் முன்னின்று பெரியமேகமுழ ...க்குக்கொப்பான வாத்தியசப்தத்தையடக்கி, "என்புத்திரனைவிட ...க்குமிக்கநண்பனும் எல்லாஆயுதங்களிலும் நிபுணனும் உபேந் ...ாகிய விஷ்ணுவுக்கொப்பானவனுமாகிய இந்தஇந்திரபுத்திரனை

பார்த்தனைப் பாருங்கள்" என்றுசொன்னார். உடனே ஆசாரியர்வா
கினால் ஆசீர்வாதம்செய்யப்பட்ட யௌவனத்தையுடையவனான அர்
சுனன் விரலில் உறையணிந்து தூணிகளில் பாணங்களைநிரப்பிக்கொ
ண்டு வில்லைப்பிடித்துப் பொன்மயமானகவசத்தைத்தரித்து, ஸூர்
னோடும் இந்திரதனுஸோடும் மின்னலோடுங்கூடிய ஸந்தியாகால
துச் சிவப்புமேகம்போல் எதிரில்காணப்பட்டான். பிறகு ஸபை
முழுமைக்குமே ஒருமலர்ச்சிஉண்டாயிற்று. வாத்தியங்களும் சங்க
களும் எங்கும் முழக்கப்பட்டன. பார்ப்பவர்கள், "இவன் குந்திபு
திரன்; இவன் அழகுள்ளவன்; இவன் பாண்டவர்களில் நடுவானவன்
இவன் தேவேந்திரனுடையபுத்ரன்; இவன் கௌரவர்களைக்காப்பா
றுகிறவன்; இவன் அஸ்திரம்தெரிந்தவர்களிற்சிறந்தவன்; இவன் த
மிஷ்டர்களிற்சிறந்தவன்; இவன் சீலமுள்ளவர்எல்லாரினும்சிறந்
வன்; நல்லொழுக்கத்திற்கும் ஞானத்திற்கும் நிதியானவன்" என்
உரக்கச்சொன்னவார்த்தைகளை எல்லாரும்கேட்டனர். குந்தியின்
மார்பு பால்சுரந்து ஆனந்தக்கண்ணீரால்நனைக்கப்பட்டிருந்தது. அ
தப்பெரிய ஜனத்திரளிலிருந்துண்டாகிய சப்தத்தினால்நிரப்பப்பட்ட
காதுகளையுடையதிருதராஷ்டிரமஹாராஜன் மனமகிழ்ந்து விதுரனை
நோக்கி, "விதுரனே! கலங்கினசமுத்திரத்தின்கோஷத்துக்கொ
பான இந்தமிகப்பெரியசப்தம் ஏது? ஆகாசத்தைக்கிழிப்பதுபோல்
ஸபையில் திடீரென்றுஉண்டாயிருக்கிறதே" என்றுகேட்டான். அ
ற்கு விதுரர், "மஹாராஜாவே! குந்திபுத்திரனும் பாண்டுபுத்திரனு
மாகிய இந்தப்பல்குனன் கவசத்துடன் அரங்கத்தில்இறங்கியிரு
கிறான். அதற்காக இந்தப்பெருங்கோஷமுண்டாயிற்று" என்றுசொ
னார். த்ருதராஷ்டிரன், "சிறந்தபுத்தியுள்ளவனே! பாக்கியம்பெற்றேன்.
குந்தியென்னும் அரணியிலுண்டான மூன்றுபாண்டவர்களென்னு
திரேதாக்னிகளால் சிறப்பிக்கப்பட்டேன்; ரக்ஷிக்கப்பட்டேன்" என்
சொன்னான். அந்தஸபையிலுள்ளஜனங்கள் பிரயாஸப்பட்டுவந்து ஸ
கோஷமாகஇருக்கும்போது அர்ச்சுனன் தன்அஸ்திரசாதுரியத்தை
ஆசாரியருக்குக்காண்பித்தான். ஆக்நேயாஸ்திரத்தினால்தீயையும்,வா
ருணாஸ்திரத்தினால் ஜலத்தையும், வாயுஅஸ்திரத்தினால் காற்றையும்
மேகாஸ்திரத்தினால் மேகங்களையும், பூம்பஸ்திரத்தினால் பூமியை
யும், பர்வதாஸ்திரத்தினால் மலைகளையும் உண்டுபண்ணினான். அந்தர்
தானமென்னும்அஸ்த்ரத்தினால் தானே மறைந்தான். ஒருக்ஷணம்
உயர்ந்தவனும் மறுக்ஷணம்குள்ளனுமாகவும் க்ஷணத்துக்கெல்லாம்
தேர்த்தட்டிலும் மறுக்ஷணம் தேர்நடுவிலும் அடுத்தக்ஷணம்பூமியி

லும் இருப்பவனாகவும்காணப்பட்டான். ஆசாரியருக்கு அன்பனாகிய அந்தஅர்ச்சுனன் ஸௌஷ்டவமென்றுசொல்லப்பட்ட அங்கங்களின் அமைப்புடன்கூடிப் பலவகைகளான பாணங்களினால் மெதுவும் பெரிதும் சிறிதுமான லக்ஷியங்களையடித்தான். சுழன்றுகொண்டிருக்கும் இரும்புப்பன்றியின்வாயில் ஒரேகாலத்தில் ஐந்துபாணங்களை ஒரு பாணம்போல் தடையில்லாமல்விடுத்தான். சிறந்தபராக்ரமமுள்ள அர்ச்சுனன், கயிற்றில்தொங்கி ஆடிக்கொண்டிருக்கும் கூர்மையான மாட்டுக்கொம்பில் இருபத்தொருபாணங்களைநாட்டினான். குற்றமற்றவரே! ஆயுதங்களில்ஸமர்த்தனாகிய அர்ச்சுனன் கத்தியிலும் தனுஸிலும் இப்படிப்பட்டமிகப்பெருங்காரியங்களைச்செய்து, கதையிலும் மண்டல ஸஞ்சாரங்களைக் காண்பித்தான்.

பாரதரே! அப்போது அந்தவேலை அனேகமாகமுடிந்து ஸபையும் வாத்தியகோஷமும் ஓய்ந்திருக்கையில் வஜ்ராயுதத்தின் அடிக்கு ஒப்பானதும் மஹிமையையும் வன்மையையும் அறிவிப்பதுமாகிய தோள்தட்டினசப்தம் வாயிற்பக்கத்திலிருந்து கிளம்புவதாகக் கேட்கப்பட்டது. ராஜாவே! 'மலைகள்பிளக்கப்படுகின்றனவா? பூமிவெடிக்கின்றதா? நீர்த்தாரைகள்நிரம்பினமேகங்களினால் ஆகாயம் நிரப்பப்படுகின்றதா?'' என்றஎண்ணம் ஒருக்ஷணம் ஸபையிலுள்ளவர்களுக்குண்டாயிற்று. அப்போது பார்ப்பவர்களனைவரும் வாயிலைநோக்கினர். ஸஹோதரர்களாகிய பஞ்சபாண்டவர்களால்சூழப்பட்ட துரோணர், ஹஸ்தநக்ஷத்திரம்ஐந்தோடுகூடிய சந்திரனைப்போல விளங்கினார். சத்துருக்களைக் கொல்லுகிறவனாகிய துரியோதனன் எழுந்திருக்க, அசுவத்தாமாவுடன்கூடப் பலமுள்ள நூறுஸஹோதரர்களும் அவனைச் சூழ்ந்துகொண்டனர். ஆயுதங்களைத்தூக்கிக்கொண்டு உறுதியாகநிற்கின்ற அந்தஸஹோதரர்களால் சூழப்பட்டுக் கதையை நுனிகையில்பிடித்திருந்த அந்ததுரியோதனன், முற்காலத்தில் அஸுரஸம்ஹாரஞ்செய்தபோது தேவக்கூட்டங்களினாற் சூழப்பட்ட இந்திரனைப்போல்விளங்கினான்.

---

## நூற்றுநாற்பத்தாறுவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)

—:o:—

(கர்ணனுடையபரீக்ஷையில் அவனுக்கும் அர்ச்சுனனுக்கும் நடந்தவாக்குவாதத்தில் கிருபாசாரியர் கர்ணனையிகழ்ந்ததற்காகத் துரியோதனன் கர்ணனுக்கு ராஜ்யாபிஷேகம்செய்வது.)

அதேகாலத்தில் அந்தஜனக்கூட்டத்தில் மனிதர்கள் வழிவிட்டு விலக, பகைவரின்நகரங்களைஜயிப்பவனும் உடன்பிறந்தகவசத்தைத் தரிப்பவனும் குண்டலங்களினால்சோபிக்கும் முகமுள்ளவனும் குந்திக்குக் கன்னிப்பருவத்திற்பிறந்தவனும் உக்கிரமானகிரணங்களுடைய சூரியனுடையஅம்சமானவனும் பெரியகண்களையுடையவனும் சத்ருசைனியத்தையழிப்பவனுமாகிய கர்ணன் உற்சாகத்தினால் மலர்ந்தகண்களுடன் கத்தியைக்கட்டிக்கொண்டு வில்லையேந்திப் பர்வதம் காலால்நடப்பதுபோல் விசாலமான அரங்கத்தில் பிரவேசித்தான். பலத்தில்யானைக்கும் சூரத்தனத்தில் விருஷபத்திற்கும் எல்லாவற்றையும் அடக்குந்திறமையில் ஸிம்மத்துக்குமொப்பானவனும், ஒளியில் சூரியனுக்கும் தண்மையில்சந்திரனுக்கும் ஜ்வலிப்பதில் அக்கினிக்குமொப்பானவனும், பொற்பனைமரம்போல் உயரமானவனும், ஸிம்மம் போன்ற சரீரக்கட்டுடையவனும், யௌவனவயஸிலிருப்பவனும், எண்ணிமுடியாதகுணங்களுடையவனும், அழகுள்ளவனும், சிறந்த கைகளுள்ளவனும், அந்தஸூர்யபுத்ரனுமாகியகர்ணன் வட்டமான ஸபையைச் சுற்றிலும்பார்த்து அதிகமாகமதியாதவன்போல் துரோணருக்கும் கிருபருக்கும் நமஸ்காரஞ்செய்தான். அந்தச்சபையிலுள்ளஜனங்களனைவரும் அசைவற்றுக் கண்கொட்டாமல் இவன்யாரென்று கலக்கமுண்டாகிப் பார்க்கஆவல்கொண்டு அசைவற்றகண்களுடன் அசைவற்றுநின்றனர். பேசுகிறவர்களிற்சிறந்தவனும் ஸூர்யபுத்ரனும் அர்ச்சுனனுடையஸஹோதரனுமாகிய கர்ணன், இந்திரபுத்ரனும் தனக்குத்தெரியாத தன்ஸஹோதரனுமாகிய அர்ச்சுனனைநோக்கி மேககர்ச்சனம்போல் கம்பீரமானகுரலுடன் பேசலுற்றான்.

"அர்ச்சுன! நீ என்னகாரியம்செய்தாயோ அதற்குமேற்பட்ட செய்கையைப் பார்த்திருக்கும்மனிதர்முன்னிலையில் நான் செய்யப்போகிறேன். உன்னைப்பற்றியே நீகர்வப்படாதே" என்றான். பேசுகிறவரிற்சிறந்த ஜனமேஜயரே! அவனுடையபேச்சு முடியாமலிரு

ாகயிலேயே அங்கிருந்தஜனங்கள் யந்திரத்தினால்தூக்கப்பட்டவர்கள்
'பால் எல்லாப்புறங்களிலிருந்தும் ஒரேகாலத்தில்எழுந்தனர். புருஷ
ரேஷ்டரே! துரியோதனனிடம் ஸந்தோஷம் குடிகொண்டது. உட
ன அர்ச்சுனனுக்கு வெட்கமும் கோபமும் உண்டாயின. மிகுந்த
லமுள்ளவனும் எப்போதும் யுத்தத்தில்விருப்பமுள்ளவனுமாகிய
ர்ணன் துரோணரால் அனுமதிகொடுக்கப்பட்டபிறகு, அங்கே அர்ச்
னன்செய்தவற்றையெல்லாம் செய்தான். பாரதரே! பிறகு துரி
'யாதனன் தன்ஸஹோதரர்களுடன்கூட அங்கே கர்ணனை ஸந்தோ
த்துடன் தழுவிக்கொண்டு, பின்பு, "மஹாபாஹுவே! உன்வரவு
ல்வரவு. எனக்குக் கௌரவத்தைக்கொடுப்பவனே! நீவந்தது என்
ாக்கியம். என்னையும் கௌரவர்களுடையராஜ்யத்தையும் உன்னிஷ்
ப்படி உபயோகித்துக்கொள்ளலாம்" என்றுசொன்னான். கர்ணன்,
'எனக்கு எல்லாம் நீ செய்தானதாக நினைக்கிறேன். உன்னுடன்
னேகத்தைவேண்டுகிறேன். பிரபுவே! நான் அர்ச்சுனனுடன்
ோந்தயுத்தம்செய்ய விரும்புகிறேன்" என்றான். ராஜாவே! இவ்
று கர்ணனால்சொல்லப்பட்ட துரியோதனன் அப்போது நீண்டும்
நந்துமுள்ள கைகளையுடைய கர்ணனைக் கட்டிக்கொண்டு, "பகை
ரை அடக்குகிறவனே! என்னோடுகூடப் போகங்களை அனுபவி; என்
வினர்களுக்குச் சந்தோஷத்தைச்செய்துகொண்டிரு; என்பகை
கள் எல்லாருடையதலைமேலும் உன்காலை வை" என்றுசொன்
ன். பிறகு அர்ச்சுனன் தான்இகழப்பட்டதாகநினைத்துத் தன்
ஸஹோதரர்களாகிய துரியோதனன்முதலியோர்நடுவில் மலைபோல்
ற்ற கர்ணனைநோக்கி, "கர்ண! நீ என்னாலடிக்கப்பட்டு, அழைக்க
டாமல்வந்தவர்களும் கேட்கப்படாமல்பேசுகிறவர்களும் எந்தலோ
களையடைவார்களோ அந்தலோகங்களை அடையப்போகிறாய்"
ன்றுசொன்னான். அதைக்கேட்டுக் கர்ணன், "பல்குன! இந்த
ம எல்லாருக்கும்பொது; இதில் உனக்கென்னவிசேஷம்? ராஜா
ள் பராக்கிரமத்தினால் பெரியவர்கள். ராஜதர்மம் பலத்தை அனுஸ
திருக்கிறது. பாரதனே! நிந்தையும் பலஹீனர்கள்படும்கஷ்டங்
நம் உனக்கேன்? பாணங்களினால் பேசு. இப்போது குருவின்
ரணெதிரே உன்தலையை அம்புகளினால் எடுத்துவிடப்போகிறேன்"
ன்றுசொன்னான். பிறகு சத்துருக்களின்நகரங்களைஜயிப்பவனாகிய
ர்த்தன், துரோணரால் அனுமதிகொடுக்கப்பெற்றும் தன்ஸஹோ
ர்களால் பரபரப்போடுஆலிங்கனஞ்செய்யப்பட்டும் யுத்தம்செய்யக்
ர்ணனைச் சந்தித்தான். பிறகு கர்ணனும், துரியோதனனும் அவன்

ஸஹோதரர்களாலும் தழுவிக்கொள்ளப்பட்டு, வில்லையும் அம்புகளையும் எடுத்துக்கொண்டு யுத்தத்திற்கு ஆயத்தமாகநின்றான். உடனே ஆகாயம் மின்னலும்கர்ச்சனையுமுள்ளவையும், இந்திரதனுவைமுன் வைத்துக்கொண்டவையும், நாரைகளின்மாலைகளாகிய பல்வரிசைகளினால் அட்டகாசம்செய்கின்றவைபோன்றவையுமான மேகங்களினால் மறைக்கப்பட்டது. பிறகு இந்திரன் புத்ரஸ்னேகத்தினால் அரங்கைப் பார்ப்பதாகக்கண்டு, ஸூர்யனும் தன்னருகில்வந்த மேகங்களை நாசஞ்செய்தான். அப்போது அர்ச்சுனன் மேகங்களின்நிழலினால் வியாபிக்கப்பட்டவனைக் காணப்பட்டான். கர்ணன் ஸூர்யகிரணங்களினால் வியாபிக்கப்பட்டவனைக் காணப்பட்டான். த்ருதராஷ்டிரபுத்ரர்கள் கர்ணனிருந்தபக்கத்தில் இருந்தனர். துரோணரும் கிருபரும் பீஷ்மரும் அர்ச்சுனனிருந்தபக்கத்தில் இருந்தனர். ஸபையே இரண்டுபிரிவாக ஆயிற்று. ஸ்திரீகளிலும் இரண்டுபிரிவுகள் உண்டாயின. *விஷயம்தெரிந்தவளாகியகுந்தி மூர்ச்சையடைந்தாள். அவ்வாறு மூர்ச்சையடைந்த அந்தக்குந்தியை ஸர்வதர்மங்களும்தெரிந்த விதுரர் வேலைக்காரிகளைக்கொண்டு சந்தனக்குழம்புகளினால் தேற்றினார். பிறகு மூச்சுவந்தகுந்தி, யுத்தஸன்னத்துடன் கவசமணிந்திருந்த அவ்விரண்டுபுத்ரர்களையும்கண்டு மிக்கஆவலுற்றவளாகி ஒன்றுந்தோன்றாமலிருந்தாள். தொந்தயுத்தத்தின் மரியாதைதெரிந்தவரும் ஸர்வதர்மங்களும்தெரிந்தவருமாகிய சாரத்வதரென்றுசொல்லப்பட்ட கிருபாசாரியர் சிறந்ததனுஸூகளையெடுத்துக்கொண்ட அக்கர்ணனைநோக்கிச் சொல்லலானார்.

"குந்தியின் இளையபுத்திரனும் பாண்டுபுத்திரனும் கௌரவனுமாகியஇந்தஅர்ச்சுனன் உன்னுடன் தொந்தயுத்தஞ் செய்யப்போகிறான். சிறந்தகைகளையுடையவனே! நீயும் இவ்வாறு உன்தாயையும்தந்தையையும் நீ எந்தராஜாக்களின் குலத்திற்குப்பூஷணமாகஇருக்கிறாயோ அந்தராஜவம்சத்தையும்சொல். உன்னைத்தெரிந்துகொண்டபிறகு அர்ச்சுனன் உனக்கெதிர்நின்று யுத்தஞ்செய்வானோ செய்யமாட்டானோ; குலமும் குலாசாரமும் இல்லாதவர்களோடு ராஜகுமாரர்கள் ஸமயுத்தம் செய்யார்" என்றார். இவ்வாறு அவரால்உரைக்கப்பட்ட கர்ணனுடையமுகம் வெட்கத்தினால்குனிந்து, மழைஜலத்தினால்நனைந்து தலைவணங்கிய தாமரைமலர்போல் விளங்கிற்று. அப்போது துர்யோதனன் கிருபரைப்பார்த்து, "ஆசாரியரே! சாஸ்திரங்களில் நிச்சயித்தபடி ராஜாக்களின்ஜாதிகள் மூன்றுவகை. நல்லகுலத்திற்பிறர்

---

* கர்ணனையும் தன்புத்ரனென்றறிந்தது.

வன் ஒருவன்; சூரன் ஒருவன்; ஸேனையை நடத்துகிறவன் மற்றொருவன். ஜலத்திலிருந்து அக்நியும் பிராமணஜாதியிலிருந்து க்ஷத்ரியஜாதியும் கல்லிலிருந்து லோஹமும் உண்டாயின. அவற்றினுடையசக்தி எங்கும் வியாபிக்கிறது; தங்கள் காரணங்களில் அடங்குகிறது. இந்த அர்ச்சுனன் ராஜனல்லாதவனோடு யுத்தம்செய்ய விரும்பானாயின் அந்தக்காரணம்பற்றியே நான் இந்தக்கர்ணனை அங்கதேசத்தின் ராஜாவாகப் பட்டாபிஷேகம்செய்கிறேன்" என்று சொன்னான். பிறகு ராஜாவான த்ருதராஷ்டிரனையும் பிதாமகராகிய பீஷ்மரையும் அநுமதிகேட்டுக்கொண்டு, அபிஷேகத்துக்குவேண்டிய சாமக்கிரிகளைப் பிராமணர்களைக்கொண்டு சேகரித்து ஸத்கர்மங்களைச்செய்யும் பிராமணர்களுக்கு ஆயிரம்பதினாயிரக்கணக்காகக் கோதானங்களைச்செய்து, "இவன் அங்கதேசராஜ்யாதிபத்தியத்திற்குத் தகுதியானவன்" என்று பிராமணர்களால் சொல்வித்தபிறகு மஹாரதனும் மஹாபலசாலியுமான கர்ணன் அதேநிமிஷத்தில் மந்திரமறிந்தபிராமணர்களால் தங்கச்சிங்காசனத்தில் உட்காரவைக்கப்பெற்று நெற்பொரிகளும் புஷ்பங்களும்நிரம்பின பொற்குடங்களினால் அங்கராஜ்யபட்டாபிஷேகம் செய்யப்பட்டான். கிரீடத்தாலும் ஹாரத்தாலும் தோள்வளைகளாலும் கைக்கடகங்களாலும் அரசர்களுக்குரிய மற்றுமுள்ள அழகிய ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டு, குடைசாமரங்களோடும் ஜயசப்தத்தோடுங்கூட ராஜ்யலக்ஷ்மியை அடைந்தான். அப்படிப்பட்டசிறப்புடைய கர்ணன் அப்போதே துரியோதனனைப்பார்த்து, "ராஜச்ரேஷ்டனே! நீ இந்தராஜ்யம் கொடுத்ததற்காக உனக்கு நான் எதைக்கொடுப்பேன்? சொல். ராஜாவே! உன்னிஷ்டப்படியே செய்வேன்" என்று சொன்னான். அந்தத்துரியோதனன் அவனைநோக்கி, "அதிகஸ்நேகத்தை விரும்புகிறேன்" என்றான். இவ்வாறுசொல்லப்பட்ட கர்ணன்அப்படியே ஆகட்டுமென்று அந்த அவனுக்கு மறுமொழிசொன்னான். இருவரும் உற்சாகத்தோடு கட்டிக்கொண்டு மிகுந்தஸந்தோஷத்தையடைந்தனர்.

---

## நூற்றுநாற்பத்தேழாவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)

—— :o: ——

(கர்ணனுடைய பிதாவாகிய தேர்ப்பாகன் சிலம்பக்கூடத்துக்கு வந்தபோது பீமன் கர்ணனைநிந்தித்ததும், எல்லாரும் அரங்கத்திலிருந்து புறப்பட்டுப்போனதும்.)

பிறகு தேரோட்டுகிறவன், மேல்வஸ்திரம்நழுவி வேர்த்து ந க்கமுற்றுத் தடியை ஆதாரமாகப்பிடித்துக் கர்ணனை அழைப்பவ போல் அரங்கத்தில் பிரவேசித்தான். அவனைப்பார்த்ததும் அபிஷே கத்தினால் ஈரமான தலையையுடைய கர்ணன் பிதாவினிடமுள்ள ம யாதைக்குக் கட்டுப்பட்டுத் தனுஸைவிட்டுத் தன்தலையினால் அ னுக்கு வந்தனஞ்செய்தான். உடனே அந்தஸாரதி பரபரப்புற்று வ திரத்தின் தலைப்பினால் பாதங்களைமூடிக்கொண்டு "புத்திரனே! என்று நிரம்பினபொருளுள்ளசொல்லைச் சொன்னான். பிறகு புத் ஸ்நேகத்தினால் தளர்ந்து அவனைக்கட்டிக்கொண்டு அங்கராஜ்யபட டாபிஷேகத்தினால் நனைந்திருக்கும் அவன்தலையை மறுபடியும் கண் ணீரினால் நனைத்தான். பாண்டுபுத்ரனான பீமஸேனன் அந்தஸாரதி யைப்பார்த்தபிறகு இவன்ஸூதபுத்ரனென்று கர்ணனைநினைத்து சிரித்துக்கொண்டே பின்வரும்சொல்லைச் சொல்லத்தொடங்கினான்.

"ஸூதபுத்ரனே! நீ அர்ச்சுனனால் யுத்தத்தில் வதஞ்செய்ய படத்தகுந்தவனல்லை. உன்குலத்துக்குத் தகுதியான சவுக்கை உடனே எடுத்துக்கொள்ளலாம்; புருஷர்களில் இழிவானவனே! யஜ் ஞத்தில் அக்கினியின்ஸமீபத்திலிருக்கும் ஹவிஸைச் சாப்பிடுவதற் நாய் எப்படித்தகுதியில்லையோ அப்படி அங்கராஜ்யத்தை அனுபவிப் பதற்கு நீ உரியவனல்லை" என்றான். இவ்வாறுசொல்லப்பட்டகர்ண உடனே கொஞ்சம்உதடுதுடித்துப் பெருமூச்சுவிட்டு ஆகாயத்திலி க்கும் ஸூரியனைப்பார்த்தான். பிறகு மஹாபலசாலியான துரியோ தனன் கோபத்துடன் தன்னுடைய அந்த ஸஹோதரர்கூட்டத்திலி ந்து, மதங்கொண்டயானை தாமரைக்குளத்திலிருந்து கிளம்புவது போலக் கிளம்பினான். அவன், பயப்படத்தக்க செய்கையையுடைய வனாகநிற்கும் பீமஸேனனைநோக்கி, "விருகோதரனே! இவ்வாறா சொல்லைச்சொல்வது உனக்குத்தகாது. க்ஷத்ரியர்களுக்குப் பலம் பெரிது. க்ஷத்ரியவம்சத்தவன் யுத்தம்செய்யவேண்டும். சூரர்களு

தும் நதிகளுக்கும் மூலம்கவனிக்கத்தகாது. ஜங்கமங்களிலும் ஸ்தா
ரங்களிலும் வியாபித்திருக்கும் அக்னி ஜலத்திலிருந்துஉண்டா
து. அஸுரர்களைக்கொல்லும்வஜ்ராயுதம் ததீசியுடையஎலும்பினால்
செய்யப்பட்டது. பகவானும் தேவராயும் ஸர்வரகஸ்யங்களுக்கும்நிதி
யுமுள்ளஸுப்ரம்மண்யரை அக்நிபுத்ரரென்றும் க்ருத்திகாபுத்ரரென்
ம் ருத்திரபுத்ரரென்றும் கங்காபுத்ரரென்றும் கேள்விப்படுகிறோம்.
க்ஷத்ரியர்களிடமிருந்துவந்த பிராமணர்களைப்பற்றியும் நீகேட்டிருக்க
ம். விசுவாமித்திரர்முதலானவர்கள் அழியாத பிராம்மணத்தன்
மையை அடைந்தனர். ஆசாரியரும் சஸ்திரம்பிடித்தவர்களிற்சிறந்த
நுமாகிய துரோணர் குடத்திலிருந்து பிறந்தவர். க்ருபர் கௌதம
டையவம்சத்தில் நாணற்கட்டையிற்பிறந்தவர். உங்களுடையபிறப்
யும் நான் தெரிந்துகொண்டிருக்கிறேன். குண்டலங்களோடும்
சத்தோடும்கூடியவனும் ராஜலக்ஷணங்களெல்லாம் பொருந்தினவ
ம் ஸூர்யனுக்கு ஒப்பானவனுமாகிய இந்தப் புலிபோன்றவனை
ன் எவ்வாறுபெறும்? இந்தப்புருஷச்ரேஷ்டன் அங்கதேச ராஜா
யிருப்பதற்குமாத்திரம் உரியவனல்லன்; அவனுடைய பாகுபல
லும் நான் அவனுடைய ஆஜ்ஞைக்கு உட்பட்டிருப்பதனாலும்
மி முழுமைக்குமே ராஜாவாயிருப்பதற்குரியவன். அல்லது எந்த
ரிதனுக்கு நான்செய்த இந்தக்காரியம் ஸகிக்கவில்லையோ அவன்
ன்கால்களினால் ரதமேறி வில்லைவளைக்கட்டும்" எனறுசொன்னான்.
கு அந்தஸபைமுழுமைக்கும் ஸரியென்றசொல்லுடன் சேர்ந்த
ரிய ஹாஹாகாரம் உண்டாயிற்று. ஸூர்யனும் அஸ்தமனமா
ன். பிறகு ராஜாவான துர்யோதனன் கர்ணனை நுனிக்கையிற்பிடி
துக்கொண்டு விளக்குக்களினால்வெளிச்சமுண்டாக்கி அந்தஸபை
வின்றும் புறப்பட்டான். ராஜாவே! பாண்டவர்களும் துரோ
ரோடும் க்ருபரோடும் பீஷ்மரோடுங்கூடத் தம்தம்கிருஹங்களுக்
ச் சென்றனர். பாரதரே! அப்போது அர்ச்சுனனென்று சிலஜன
ளும் கர்ணனென்றுசிலஜனங்களும் துரியோதனனென்றுசிலஜன
ளும் சொல்லிக்கொண்டுபோயினர்.

குந்தி, கர்ணனை உயர்ந்தராஜலக்ஷணங்களினால் தன்புத்திரனென
று தெரிந்து, (அவன்) அங்கதேசாதிபதியானதைக்கண்டு புத்ர
ஸ்நேகத்தினால் மனத்தில் ஸந்தோஷமடைந்தாள். ராஜாவே! அப்
து துரியோதனனுக்கும் கர்ணனையடைந்தவுடனே அர்ச்சுன
டத்திலுண்டானபயம் மறைந்துபோயிற்று. ஆயுதங்களில் தேர்
யடைந்த அந்தவீரனாகிய கர்ணனும் மிக்க அன்புடன் துரியோ
னிடம்பேசினான். அப்போது யுதிஷ்டிரனுக்கும் கர்ணனுக்குஒப்
க விற்பிடிக்கவன் பூமியிலில்லையென்ற எண்ணமுண்டாயிற்று.

நூற்றுநாற்பத்தெட்டாவது அத்தியாயம்.

---

ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)

---

துரோணருக்குக் குருதக்ஷிணைகொடுப்பதற்காகத் த்ருபதராஜனை உயி ரோடுபிடித்துக்கொண்டுவரக் கௌரவர்கள்போனதும், அவர்கள் அவனிடம்தோற்றுவந்தபிறகு பாண்டவர்கள்போனதும், அவர்களில் அர்ச்சுனன் அவனை உயிருடன்பிடித்துவந் ததும், த்ருபதனுடைய பாதிராஜ்யத்தைத் துரோணர் வாங்கிக் கொண்டதும், பின்பு த்ருபதன் புத்ரோத்பத்திக்காக முயற்சிசெய்ததும்

பாண்டுபுத்ரர்களும் த்ருதராஷ்டிரபுத்ரர்களும் அஸ்த்ரங்களி தேர்ந்ததைக்கண்டு, அந்தக்குருவான துரோணர் ஸரியானகாலத்தி குருதக்ஷிணையைப்பற்றி நினைத்தார். அஸ்திரங்களில்தேர்ச்சியை பற்றி எல்லாராலும் அங்கீகரிக்கப்பட்டு அரங்கின்வாயிலுக்கு வந் சேர்ந்தபிறகு அவர்களெல்லாரையும்நோக்கித் துரோணாசாரிய "நீங்களெல்லாரும்சேர்ந்து எனக்கு ஓர்உயர்ந்ததக்ஷிணையைக் கொ க்க விரும்புகிறேன்" என்றுசொன்னார். இவ்வாறுசொல்லப்பட் சிஷ்யர்களனைவரும் அங்கே உடனே துரோணரைப்பார்த்து, "ப வானே! நாங்கள் என்னகொடுக்கக்கடவோம்? குரு எங்களுக்கு கட்டளையிடவேண்டும்" என்று கேட்டனர். ராஜாவே! அதன்பிற துரோணாசாரியர் சிஷ்யர்களனைவரையுமழைத்து, "நீங்கள் பாஞ்சா ராஜாவாகிய த்ருபதனைப் போர்முனையிற் பிடித்துக்கொண்டு வாரு கள். உங்களுக்கு ஸுகமுண்டாகக்கடவது. அதுதான் உயர் தக்ஷிணையாகும்" என்று தக்ஷிணைக்குரிய பொருளைக்கட்டளையி டார். அவர்களெல்லாரும். "அப்படியேயாகட்டும்" என்றுசொல் குருதக்ஷிணை கொடுப்பதற்காகத் துரோணருடன்சேர்ந்து இரதங்க லேறி யுத்தஞ்செய்ய விரைவாகப் புறப்பட்டனர். பிறகு அந்தப் பு ஷச்ரேஷ்டர்கள் பாஞ்சாலதேசத்தைத் துன்பப்படுத்திக்கொண் சேர்ந்தனர். துர்யோதனன், கர்ணன், மிகுந்தபலமுள்ள யுயுத்ஸ துச்சாஸனன், விகர்ணன், ஜலஸந்தன், ஸுலோசனன் இவர்களு மிகுந்தபராக்ரமமுள்ள இன்னும்அனேகம் ராஜகுமாரர்களும் ராஜ களும் நான்முன்னே நான்முன்னேயென்று மஹாபராக்ரமசாலியா அந்தத்த்ருபதனுடையநகரத்தை அழித்தனர். பிறகு உயர்ந்தரத களில்ஏறின குமாரர்களனைவரும் ஸாரதிகளுடன் நகரத்தில்பிர சித்து ராஜமார்க்கத்தைச்சேர்ந்தனர். ராஜாவே! அந்தக்காலத்தி

ஞ்சாலதேசத்தரசனுகிய துருபதன் பெரியஸைனியத்தைப்பற்றிக் கட்டும் பார்த்தும் தன்ஸஹோதரர்களுடன்கூடத் தன்வீட்டிலிரு து துரிதமாகப் புறப்பட்டான். அப்போது துருபதனுடைய அந் ச்சகோதரர்களனைவரும் கவசமுதலியவற்றைத் தரித்துக்கொண்டு ரமாரிகளைப்பொழிந்து கர்ச்சனம்செய்தனர். பிறகு யாருக்கும்வெல் முடியாத துருபதன் வெண்மையானரதத்திலேறி யுத்தத்தில் கௌ வர்களை ஸந்தித்து உக்கிரமான பாணங்களை வருஷித்தான். அர்ச் னன் முன்னமே ராஜகுமாரர்களுடைய அதிககர்வத்தைப்பற்றி ராய்ந்து பிராமணோத்தமரான துரோணுசாரியரிடம், "இவர்கள் ராக்ரமம்முடிந்தபின் நாம் பராக்கிரமத்தைக்காண்பிப்போம்; பாஞ் லராஜனைப்போர்த்தலையிற்பிடிக்க இவர்களால்முடியாது" என்று சான்னுன். குற்றமற்ற அந்த அர்ச்சுனன் இவ்வாறுசொல்லித் தன் ஹோதரர்களுடன்கூட நகரத்துக்குவெளியில் அரைக்குரோசதூர திலேயே நின்றுன். துருபதன் கௌரவர்களைப்பார்த்துப் பெரிய ணவர்ஷத்தினுல் அவர்களுடையஸேனையை மயங்கச்செய்து சுற் ம்ஓட்டினுன். ரதத்திலேறி யுத்தத்திற்கு ஆரம்பித்தவனும் யுத்தச் சய்கைகளை விரைவாகச்செய்கின்றவனுமாகிய அந்தத்துருபதன் நவனைப்பார்த்து அங்கிருந்த கௌரவர்கள் பயத்தினுல் அனேகர்க ருப்பதைப்போல நினைத்தனர். துருபதனுடைய உக்கிரங்களான ணங்கள் எல்லாத்திசைகளிலும் சஞ்சரித்தன. மஹாராஜாவே! ப்போது பாஞ்சாலர்களுடையவீடுகளில் சங்கங்களும் பேரிகை ளும் மிருதங்கங்களும் ஆயிரக்கணக்காகவாசிக்கப்பட்டன. மஹாத் க்களாகிய பாஞ்சாலர்களுடைய ஸிம்மநாதமும் வில்லின்நாண்கள் கத்தலத்தில் உரைபடுவதனுலுண்டான பெரியசப்தமும் ஆகாயத் தவியாபித்துக் கிளம்பின. துரியோதனன், விகர்ணன், ஸுபா , தீர்க்கலோசனன், துச்சாஸனன் இவர்கள் கோபித்துச் சர ரிகள்பொழிந்தனர். பாரதரே! யுத்தத்தில் யாருக்கும் ஜயிக்க டியாத சிறந்தவில்லாளியான அந்தத்துருபதன் அதிகமாக அடிந் பட்டு, (பின்பு) அந்தச்சேனைகளை அந்தநிமிஷத்திலேயே ஊதி ட்டான். அந்தத் துருபதன் சுற்றப்பட்ட எரிகொள்ளியைப்போல் னையைச்சுற்றி ஸஞ்சரித்துக்கொண்டு துரியோதனனையும் விகர் னையும் மஹாபலசாலியானகர்ணனையும் வீரர்களான அனேகராஜ மாரர்களையும் பலவிதமானசேனைகளெல்லாவற்றையும் பாணங்களி ல்நிரப்பினுன். பிறகு நகரத்துஜனங்களனைவரும் மேகங்கள்மழை பாழிவதுபோல் கௌரவர்களின்மேல் உலக்கைகளையும், தடிகளையும்

பொழிந்தனர். பாரதரே! காம்பில்யநகரத்தவர், பெரியயுத்தம்நடப்பதைக்கேட்டு உடனே கௌரவர்களையே எதிர்த்துச்சென்றனர்; கௌரவர்கள் கதறினர்; ஓடினர். பாண்டவர்களைக்கூவிக்கொண்டு கதறின அவர்களுடைய மயிர்க்கூச்சமெடுக்கச்செய்யும் குரலைக்கேட்டவுடனே பாண்டவர்கள், துரோணரை அபிவாதனஞ்செய்து ரதங்களில்ஏறினர். அப்போது அர்ச்சுனன் பாண்டுபுத்திரரான யுதிஷ்டிரரை, "நீர் யுத்தஞ்செய்யவேண்டாம்" என்றுநிறுத்தி, உடனே மாத்ரியின்புத்ரர்களைத் தேரின் சக்ரரக்ஷகர்களாகச்செய்தான். அப்போது பீமஸேனன் கதையுடன்கூட ஸேனைக்குமுன்போகிறவனானான். அப்போது குற்றமற்ற அர்ச்சுனன் சத்துருக்களின்சப்தத்தைக்கேட்டு, தன்தேரினால் திசைகளில் சப்தமுண்டாக்கிக்கொண்டு தன்ஸஹோதரர்களுடன்கூட விரைவாகச்சென்றான்.

பிறகு கொந்தளித்தகடலைப்போல் ஒலிக்கின்ற பாஞ்சாலர்களின் மஹாஸேனையில், தண்டாயுதத்தைக்கையில்தரித்த யமனுக்கொப்பான சிறந்தகைகளையுடைய பீமஸேனன் ஸமுத்திரத்தில் முதலைபிரவேசிப்பதுபோல் பிரவேசித்தான். பிறகு சதுரங்கஸைனியமும் நிறைந்த அந்தயுத்தமென்னும்உற்சவத்தில் கதையைத்தரித்தபீமன் ஸ்வயமாகவே யானைச்சேனையைஎதிர்த்தான். யுத்தத்தில்நிபுணனும் பாஹு பராக்ரமத்தில்ஒப்பற்றவனும் யமனைப்போன்றஉருவத்தைத் தரித்தவனுமாகிய பீமன் கதையினால் யானைச்சேனையைஅடித்தான். மலைகளைப்போன்ற அந்தயானைகள் பீமசேனனுடையகதையினால் உண்டை வடிவங்களான மஸ்தகங்கள் பெயர்க்கப்பட்டு மிகுதியாகிய இரத்தத்தைப் பெருக்கிக்கொண்டு, வஜ்ராயுதத்தினால் அடிபட்டமலைகளைப்போல் பூமியில்விழுந்தன. அர்ஜுனனுக்குஜ்யேஷ்டனானபீமன் யானைகளையும் குதிரைகளையும் தேர்களையும் வீழ்த்தினான்; இடையன் வனத்தில் பசுக்களைத் தடியினால் அடிப்பதுபோல் காலாட்களையும் தேராளிகளையும் அடித்தான். பீமஸேனன் தேர்களையும் யானைகளையும் ஓட்டிக்கொண்டுசென்றான். ராஜாவே! துரோணாசாரியருடைய விருப்பத்தைச்செய்யஆரம்பித்த அந்தப்பாண்டவனாகிய அர்ச்சுனன் அப்போது பாணவருஷங்களைவருஷித்துக் குதிரைகளையும் தேர்களையும் யானைகளையும் கூட்டங்கூட்டங்களாக நாலுபக்கங்களிலும் வீழ்த்தி யுத்தத்தில் பிரளயகாலாக்னியைப்போல் ஜ்வலித்துக்கொண்டு துருபதனிடம்வந்தான். அப்போது அடிக்கப்பட்ட அந்தப்பாஞ்சாலதேசத்தாரும் ஸ்ருஞ்சயதேசத்தாருமாகிய அனைவரும் பலவகைஅம்புகளினால் அர்ச்சுனனை விரைவாகமறைத்து வாய்களினால்ஸிம்மநாதங்களை

சய்து அர்ச்சுனனுடன் யுத்தம்செய்தனர். அந்தயுத்தம் பயங்கர ாகவும் பார்ப்பதற்கு மிக்கஆச்சரியமாகவுமிருந்தது. ஸிம்மநாதத் தக்கேட்டு இந்திரபுத்ரனான அர்ச்சுனன் கோபமுற்றான். பிறகு ர்ச்சுனன் வேகமாகப் பாஞ்சாலர்களை அதிகமான பாணவருஷத்தி ல்மறைத்துத் திசைமயங்கச்செய்து துரத்தினன். புகழ்பெற்ற ர்ச்சுனன் பாணங்களை இடைவிடாமல்விடுத்துக்கொண்டும் தொடுத் க்கொண்டுமிருக்கும்போது இவ்விரண்டிற்கும் இடையிட்டகாலம் ணக்கூடாமலிருந்தது. மஹாராஜாவே! அப்போது அந்தச்சண் டயில் திசைகளும் ஆகாயமும் பூமியும் ஒன்றும்காணப்படவில்லை. ண்டீவமென்னும்வில்லைத்தரித்துப் பலவானன அர்ச்சுனன் பாணங் ளினல் இருளைஉண்டாக்கினபோது பாஞ்சாலர்களும் கௌரவர்க ும் நல்லதுநல்லதென்றுகூவினசப்தமும் பேரிகைகளின்முழக்கமும் ாகங்களின் பெருமுழக்கமும் சிலாகிக்கும்சப்தத்தோடுகூடிய து ந னுடையஸிம்மநாதமும் அங்கேஉண்டானபிறகு, தேவேந்திரனைச் ம்பரன்எதிர்த்ததுபோல் ஸத்யஜித்என்பவனுடன்கூடத் துருபதன் ர்ச்சுனனை விரைவாகஎதிர்த்தான். அர்ச்சுனன் பெருஞ்சரமாரியால் ஞ்சாலராஜனை மூடிவிட்டான். அப்போது மஹாஸிம்மமானது *யூதபதியானயானையைப் பிடிக்கப்போகையில் மற்றயானைகளிட ண்டாகும்சப்தம்போல் பாஞ்சாலர்சேனையில் ஹாஹாகாரம்பிறந் து. அப்போது தனஞ்சயன்வருவதைக்கண்டு உறுதியானபராக்ர முள்ள ஸத்யஜித்என்பவன் துருபதனைக்காப்பாற்றுவதற்காக அவ யெதிர்த்துப்போனன். அப்போது அந்தஅர்ச்சுனனும் துருபத ும், இந்திரனும் மஹாபலியும்போல் யுத்தஞ்செய்வதற்காகச் சந் த்துச் சேனைகளைக்கலங்கச்செய்தனர். அப்போது பார்த்தன் ஸத்ய த்தை மர்மங்களைப்பேதிக்கின்ற பத்துப்பாணங்களை ஆழப்பாய்ச்சிப் மாகஅடித்தான். அது ஆச்சரியமாகஇருந்தது. பிறகு ஸத்யஜித் ற்றுக்கணக்கானபாணங்களினல் அர்ச்சுனனை விரைவாகப்பீடித் ன். மஹாரதனும் மிகுந்தவேகமுள்ளவனுமாகிய அர்ச்சுனன் ணவருஷத்தினல் மூடப்பட்டபோது தனுவின்நாணைத்தடவி வே தைச் செய்தான். உடனே ஸத்யஜித்தினுடையவில்லை அறுத்து டுத் துருபதராஜாவையெதிர்த்துச்சென்றான். அதன்பின் ஸத்ய மிகவும்விரைவாக மற்றொருவில்லையெடுத்துக்கொண்டு அர்ச்சுன த் தேர்க்குதிரைகளோடும் ஸாரதியோடும் தேரோடும்கூட விரை அடித்தான். யுத்தத்தில் ஸத்யஜித்தினல்அடிக்கப்பட்ட அர்ச்

* யூதம் - யானைக்கூட்டம்.

சுனன் அதைப்பொறுக்கவில்லை. பிறகு அவனையொழிப்பதற்கா பாணங்களைவிட்டான். குதிரைகளையும் கொடியையும் விற்பிடி யும் பின்காப்பவனும்ஸாரதியுமாகிய இருவரையும் அடித்தான். அ வாறு திரும்பத்திரும்ப விற்கள் பிளக்கப்பட்டும் குதிரைகள் துணி ப்பட்டும் போனபோது அந்தஸத்யஜித் யுத்தத்தைவிட்டுத் திரும்பி போனான். ராஜாவே! அவ்வாறு யுத்தத்தில் ஸத்யஜித் திரும்பி போனதைக்கண்டு அர்ச்சுனன் துருபதனை மிகுந்தவேகத்துட எதிர்த்துப்போனான். அப்போது ஜயிப்பவர்களுக்கெல்லாம்மேலா அர்ச்சுனன் பெரியயுத்தஞ்செய்தான். பார்த்தன், துருபதனுடை வில்லைவெட்டிக் கொடியையும் தரையில்வீழ்த்தினான். ஐந்துபாண களினால் அவனுடைய குதிரைகளையும் ஸாரதியையும் அடித்தா அர்ச்சுனன் உடனே அந்தவில்லைவைத்துவிட்டுக் கேடகம்பிடித்து கத்தியையுருவிக்கொண்டு ஸிம்மநாதத்தைச்செய்தான். உடனே எழு பித் துருபதன் தேரின்ஏர்க்காலில் குதித்தான். தனஞ்சயன் பயமி லாமல் துருபதனுடையதேரையடைந்து கருடன்கடலைக்கலக்கி நாக த்தைப்பிடிப்பதுபோல் அவனைப்பிடித்தான். பிறகு பாஞ்சாலதே தாரனைவரும் பத்துத்திசைகளிலும் ஓடினர். அந்தத்தனஞ்சய எல்லாச்சேனைகளுக்கும் தன்கைவன்மையைக் காண்பித்து ஸிம்ம சனைபோன்றகர்ச்சனையைச்செய்து வெளிப்புறப்பட்டான். அர் னன்வருவதைக்கண்டு கௌரவகுமாரர்கள்சேர்ந்து மஹாத்மாவா அந்தத்துருபதனுடையநகரத்தை அப்போதே அழிக்கத்தொட னர். அப்போது அர்ச்சுனன், "பீமனே! ராஜச்ரேஷ்டனாகிய து பதன் கௌரவவீரர்களுக்குச் சினேகிதன். அவனுடையஸேனை கொல்லாதே; குருதக்ஷிணைதானே கொடுக்கவேண்டும்" என்று மிகுந்தபலமுள்ளபீமஸேனன் அர்ச்சுனனால்தடுக்கப்பட்டபோது ய தம்செய்ததில் திருப்தியில்லாமலே திரும்பினான். பரதச்ரேஷ்டனே அவர்கள் போர்முனையில் யஜ்ஞஸேனனென்றுசொல்லப்பட்ட து பதனை மந்திரியுடன்பிடித்துத் துரோணரிடம்கொண்டுவந்தனர். வபங்கம்செய்யப்பட்டும் தனத்தைப்போக்கப்பட்டும் அவ்வாறுபிடி கப்பட்ட அந்தத்துருபதனைப்பார்த்துத் துரோணர் த்வேஷத்தை மனஸில்வைத்துப் பேசலானார்.

"என்னால் உன்னுடையதேசம் துடைக்கப்பட்டது. உன்ந ரமும் பிடிக்கப்பட்டது. உயிரோடு எதிரியின் வசத்திலகப்பட பிறகு சினேகிதனென்பதை முன்னிட்டு என்னைவிரும்பலாமா என்றுசொல்லி, மறுபடியும் கொஞ்சம்சிரித்துக்கொண்டு அவனை

ார்த்துச் சொல்லத்தொடங்கினர். "வீரனே! உயிருக்கு அபாயம்
ருமென்று பயப்படாதே. நாங்கள் பொறுமையுள்ள பிராமணர்கள்.
ஷத்ரியச்ரேஷ்டனே! பால்யத்தில் என்னோடுகூட ஆச்ரமத்தில் விளை
ாடினதினால் சினேகமும் அன்பும் விருத்திசெய்யப்பட்டன. ராஜா
வ! மறுபடியும் உன்னுடன் ஸ்நேகத்தையேவேண்டுகிறேன். ராஜா
வ! உனக்கு ஒருவரம்தருகிறேன். அதாவது, ராஜ்யத்தில் பாதி
யையடை. யஜ்ஞஸேன! ராஜாவாக இராதவன் ராஜாவுக்குஸ்னே
'தனக இருக்கத்தகாதவனல்லவா? அதனாலேதான் உன்னுடைய
ராஜ்யத்தைப்பற்றிப் பிரயத்னஞ்செய்தேன். கங்கையின்தென்கரை
ல் உன்ராஜ்யம்; வடகரையில் என்ராஜ்யம். பாஞ்சாலராஜனே!
ிருப்பமிருந்தால் என்னை ஸ்னேகிதனென்று நீயறியலாம்" என்றார்.
ருபதன், "பிராமணரே! பராக்ரமமுள்ள மஹாத்மாக்களிடம் இஃது
ச்சரியமன்று. நான் உம்மிடத்தில் பிரீதிவைக்கிறேன். உம்முடைய
ர்க்கமான பிரீதியையும் விரும்புகிறேன்" என்றான். பாரதரே!
வனால் இவ்வாறுசொல்லப்பட்டபோது துரோணர் அந்தத்துரு
தனை விடுவித்தார். அவனுக்கு மரியாதையும்செய்து மனத்தில்
ன்புடன் ராஜ்யத்திற்பாதியையும் கொடுத்தார். பிறகு அந்தத்
ருபதன் மனத்தளர்ச்சியடைந்து கங்கைக்கரையில் அனேகதேசங்
ளோடுகூடிய மாகந்தியென்னும் பட்டணத்தையும் காம்பில்யமென்
வும் சிறந்தபட்டணத்தையும் சர்மண்வதிவரையிலுள்ள தக்ஷிண
ாஞ்சாலதேசத்தையும் ராஜ்யமாகச்செய்தான். இவ்வாறு துரோண
ால் அவமதிக்கப்பட்டுப் பிறகு காப்பாற்றப்பட்ட துருபதன் தனது
ஷத்ரியபலத்தினால் அவர் தோல்வியடைவதை நினைக்கவில்லை. துரு
தன் பிரம்மதேஜஸ் என்னும்பலம் தனக்கில்லாமையைத் தெரிந்து
கொண்டு, புத்ரன்ஜனிக்க உபாயம்தேடிப் பூமியெல்லாம்ஸஞ்சரித்
ான். துரோணர் அஹிச்சத்ரம் என்னும் தேசத்தையெடுத்துக்
கொண்டார். ராஜாவே! அனேகதேசங்களடங்கிய அஹிச்சத்ராபுரி
இவ்வாறு அர்ச்சுனனால் யுத்தத்தில் ஜயிக்கப்பட்டுத் துரோணருக்
குக் கொடுக்கப்பட்டது.

---

கொண்டிருப்பார். வனத்தில் குருகுலவாசஞ்செய்து வேதாத்ய
னம்செய்யும்போது மற்றவர்கள் எறிந்துவிட்டபிக்ஷையை எப்பொ
தும்புஜித்துக்கொண்டிருந்தார். பிறகு அன்னங்களின்குணங்களை
சொல்லி அடிக்கடி மகிழ்வார். ராஜாவே! இவ்வாறு அவர் பிரயோ
ஜனத்தைவிரும்புகிறவராதலால், உனக்கு அவர் யாகம்செய்விப்பா
ரென்று ஊகமென்னும்கண்ணினால் அறிகிறேன். நீ இப்போது அவ
ரிடமேசெல்" என்றார். துருபதராஜன் உபயாஜருடையசொல்லை
கேட்டு அதை மனஸில்நினைத்து அருவருப்புடன் யாஜருடையஆஸ்
மத்திற்குப் போனான். பூஜிப்பதற்குரிய யாஜரென்னும்ரிஷியை
செவ்வையாகப்பூஜித்து, "யாஜரே! சக்தியுள்ளவரே! உமக்கு எண்
ணூறுபசுக்களைக் கொடுப்பேன். பிராம்மணஜாதியினிடமிருக்கு
க்ஷத்ரியபலத்தை க்ஷத்ரியன்ஜயிக்கமுடியாது. பிராமணரே! ஆதலா
இப்போது துரோணருடையவிரோதத்தில்அகப்பட்டுக் கொதிப்புற்
விசனத்துடன் சரணாகதிசெய்த எனக்கு யாகம் செய்வியும். எந்த
கருமம் செய்வதினால் துரோணர்மரணத்துக்குக்காரணமானபுத்தி
னும் அர்ச்சுனனுக்கு மனைவியாகத்தக்கபுத்திரியும் எனக்கு உண்ட
வார்களோ அதைச்செய்வித்துத் துரோணர் பயத்தினின்றும் என
னைக்காப்பாற்றவேண்டும். அந்தத் துரோணர் பிரம்மஜ்ஞானிகளி
சிறந்தவர். பிரம்மதேஜஸிலும் க்ஷத்ரியசக்தியிலும் அவருக்கு மே
பட்டவரில்லை. அதனால் துரோணர், ஸ்நேகிதர்களுக்குண்டான சண்
டைகாரணமாக என்னை ஜயித்துவிட்டார். அவருக்கு ஸமானமா
முதன்மையான க்ஷத்ரியன் ஒருவனும் இப்புவியிலில்லை. பரதவம்ச
தாருக்கு முதன்மையான ஆசாரியரும் பரத்வாஜபுத்திரரும் சிறந்
புத்திமானுமாகிய துரோணருடைய அம்புகளின் வரிசைகள், சத்ரு
களின் வரிசைகளையும் சத்ருக்களின் தேகங்களையும் பிளப்பவை
அவருடையவில் ஆறுமுழமுள்ளது; அவருடையசக்தியும் ஒப்பற்றத
சிறந்தவில்லாளியும் மிகுந்தவன்மையுள்ளவருமாகிய அந்தத்துரோ
ணர் பிராமணவடிவத்தோடிருந்துகொண்டு க்ஷத்ரியர்வலிமையை நி
சயமாகத் தடுத்துவிடுகிறார். அவர், யுத்தத்தில் கார்த்தவீர்யனுக்கு
கட்வாங்கனுக்கும் ஒப்பானவர்; பரசுராமரைப்போலவே க்ஷத்ரிய
களையழிப்பதற்காக உண்டாக்கப்பட்டிருக்கிறார்; க்ஷத்ரியதேஜஸு
பிராம்மணதேஜஸும் சேர்ந்தவரான துரோணர் கீர்த்திபெற்றிருப்ப
தருமென்று நான் இப்போது நினைக்கிறேன்; அம்புகளும் சுட்டி
ளும் கத்திகளும் அவருக்குத் தீங்குசெய்யா; அவருடையபெரி
பிரம்மதேஜஸ் மந்திரங்களோடுகூடிய ஆகுதிகளினால் ஜ்வலிக்கின்

அக்கினியைப்போன்றது; அவருடைய அஸ்த்ரபலமும், பயந்தரத்தக்க தும் பூமியிலுள்ளஎதிரிகளால் தாங்கக்கூடாததுமாயிருக்கிறது; பிர ம்மதேஜஸை முன்னிட்டுக்கொண்டிருக்கிற க்ஷத்ரியதேஜஸ் சத்துரு க்களைச் சந்தித்தவுடன் ஜயித்துவிடுகிறது; பிரம்மதேஜஸும் க்ஷத் ரியதேஜஸும் ஸந்திக்கும்போது பிரம்மதேஜஸே மேலாகிறது; ஆத லால், க்ஷத்ரியபலம் பிந்தித் தோல்வியுற்றநான் பிரம்மதேஜஸைச்சரண மடைந்திருக்கிறேன். துரோணருக்குமேற்பட்ட சிறந்தபிரம்மஜ்ஞா னியாகிய உங்களையடைந்தபின் துரோணர் மரணத்திற்குக்காரணமும் யுத்தத்தில்வெல்லமுடியாதவனுமான புத்திரனை நான் அடையக்கட வேன். யாஜரே! துரோணமரணத்திற்குக்காரணமான வீரனாகியபுத் ரா எந்தக்கர்மஞ்செய்வதனால் எனக்குண்டாவனோ அந்தக்கருமத் தை எனக்குச்செய்யக்கடவீர். உமக்குப் பத்துக்கோடிப்பசுக்களைக் கொடுப்பேன்" என்றான். யாஜர் அவனுக்கு அப்படியேயாகட்டு மென்றுசொல்லி யாகத்துக்காக ஆரம்பஞ்செய்து விருப்பமில்லாத உபயாஜரையும் *குருவின்காரியம் என்றழைத்தனர். துருபதமஹா ராஜனை நோக்கி, "நீ பயப்படாதே; என்கிரியையினால் உனக்குப்புத் திரனைக்கொடுப்பேன்; சீக்கிரம் எழுந்திரு; கவலையில்லாமல் வேண் டியஸாமக்கிரிகளைச் சேகரஞ்செய்" என்றுசொன்னார். இவ்வாறு ஆஜ்ஞாபித்து வாக்குத்தத்தஞ்செய்து யாஜமுனிவர் அவனுடைய காரியத்தைமேற்கொண்டார். பிராமணரும் மனிதர்களிற்சிறந்தவரு மாகிய யாஜர் அவ்வரசனுக்குத் துரோணர்மரணத்தைப்பற்றிச் சாஸ் திரப்படியும் கிரமப்படியும் யாகஞ்செய்வித்தார். பிறகு சிறந்ததவ முள்ள உபயாஜரும் தமதுகுருவான யாஜருடைய பிரயோஜனத்திற் காக அவர்ஸமீபத்திலிருந்து, அந்தராஜாவுடையகாரியத்தை நடத்தி னர். அவ்வாறு புத்ரபலனுக்குக்காரணமான அந்தயாககாரியத்தைப் பற்றி, "ராஜாவே! இந்தயாகத்தில் நீஎவ்வகையானபுத்திரனைவிரும் புகிறாயோ அவ்வகையான சிறந்தபராக்கிரமமும் சிறந்தஒளியும் மிக்க பலமுமுள்ள புத்திரன் உண்டாகப்போகிறான்" என்றுசொன்னார். ராஜாவே! அப்போது அந்தத்துருபதராஜன் துரோணரைக்கொல் லத்தக்கவனைப்பற்றி நினைத்துக்கொண்டு ஸித்தியாவதைஉத்தேசித்து அந்தக்கருமத்தைச்செய்தான். மனிதரிற்சிறந்த அந்தப்பிராம்மண ரும் சாஸ்திரப்படி ஹோமஞ்செய்தார். புத்திரனைவிரும்பின அந்தத் துருபதனுக்கு ஸௌத்ராமணியென்னும் அந்தயாகத்தில் பத்தினியா யிருந்த கௌஸவியென்பவளிடம் பூர்ணாஹுதிகாலத்தில் அந்தயாஜர்

* ஜ்யேஷ்டராகியயாஜர்.

சென்றார். அந்தயாகத்தின்முடிவில் யாஜர், "ராஜபத்னியானப்
ஷதியே! என்னிடம் இந்தஹவிஸைப்புஜிக்க வருக. உனக்குத் த
கள்பிதாவின்வம்சத்தைவிருத்திசெய்யத்தக்க ஒருகுமாரனும் ஒ
குமாரியுமாகிய இருவர் சீக்கிரத்திலுண்டாகப்போகின்றனர்" என்
சொன்னார். "*நான் முகத்தில் மஞ்சள்பூசிக்கொள்ளவில்லை. இனி
கந்தங்களைத் தரித்துக்கொண்டிருக்கிறேன். புத்ரோத்பத்திக்குரி
உம்முடைய இந்தயஜ்ஞத்தில் நான் பத்தினியாவதற்கில்லை. யாஜரே
என் விருப்பத்தின்படி நீர் இருக்கக்கடவீர்" என்று ப்ருஷதிசொ
ளுள். "யாஜரால்பாகம்செய்யப்பட்டு உபயாஜரால்மந்திரிக்கப்பட்
ஹவிஸ் எவ்வாறுஇஷ்டபலனைச்சேர்ப்பிக்காமலிருக்கும்? பிருஷ
யே! வந்தாலும்வா; நின்றாலும்நில்" என்று யாஜர்சொன்னார். இ
வாறுசொல்லி யாஜர் மந்திரசுத்தமானஹவிஸை ஹோமஞ்செய்
போது அந்தஅக்கினியிலிருந்து ஜ்வாலைநிறமுள்ளவனும் பயப்பட
தக்கஉருவமுள்ளவனும் கிரீடம், கவசம், கத்தி, வில், அம்பு இவை
களைத்தரித்தவனும் தேவனைப்போன்றவீரனுமான ஒருகுமாரன் அ
க்கடிகர்ச்சித்துக்கொண்டு எழுந்தான். அவன் சிறந்ததேரிலேறி அ
ஞல் ஸஞ்சரித்தான். அந்தக்குமாரன் ஜனித்தமாத்திரத்தில் ஒ
அசரீரிவாக்கு, "இவன் துரோணருக்குச்சிஷ்யனாகவும் யமனா
வும் பிறந்திருக்கிறான். இந்தராஜபுத்திரன் பாஞ்சாலர்களுக்குப் ப
த்தைப்போக்கிப் புகழையுண்டுபண்ணுகிறவன். இவன் துரோண
வதம்செய்து துருபதராஜாவின்துயரத்தை ஒழிப்பதற்குப் பிறந்
வன்" என்றுசொல்லிற்று. ஆகாயத்தில்ஸஞ்சரிப்பதும் கண்ணு
குத்தெரியாததுமான ஒருபெரியதெய்வம் இவ்வாறுசொன்னவு
னே பாஞ்சாலர்கள்மகிழ்ந்து, 'நல்லது, நல்லது' என்று சப்தஞ்
செய்தனர். இரண்டாவதுஹோமகாலத்தில் மந்திரம்சொல்லி ஹவி
ஸை அக்கினியில்ஹோமம்செய்தபோது பாஞ்சாலியாகியகுமா
யும் யாகவேதிகையின்மத்தியிலிருந்தெழுந்தாள். பரதச்ரேஷ்டரே
ப்ருஷதியாகியகௌஸவி புரோகிதரானயாஜரைமறுத்ததனால் மறுப
யும் அழகானபாஞ்சாலியென்னும்குமாரியும் யாகவேதிகையின்மத்தி
யிலிருந்தேஉண்டானாள். மனத்தை மிகவும்கவருகின்றவளும், கறு
தநிறமும் தாமரையிதழ்போன்றகண்களும் கறுத்துச்சுருண்ட அ
கங்களுமுடையவளுமான அந்தக்கன்னிகை ஸ்ரீதேவியே வேறுநிற
தோடு மானிடவடிவமெடுத்துவந்ததுபோல் வேதிகைக்குள்ளிருந்து
உண்டானாள்; சிவந்தும்உயர்ந்துமிருக்கும் நகங்களோடும் அழகி

* ஸ்நானம்செய்யவில்லை என்பது கருத்து.

நவங்களோடும் அழகிய பருத்தஸ்தனங்களோடும்கூடினவளாக
ருந்தாள். கருநெய்தல்மலர்மணத்துக்கொப்பான அவளுடையதேக
ணம் ஒருகுரோசம்வரையில் வீசிற்று. அவளுடையஅழகு எல்லா
ற்றிற்கும் மேலானது. பூமியில் அவளுக்குஉவமையில்லை. அவள்
தவர்களும் அஸுரர்களும் யக்ஷர்களும் விரும்பத்தக்க சிறந்த
பண். அழகியநிதம்பங்களையுடையஅவள் பிறந்தபிறகும், "எல்லாப்
பண்களிலும்சிறந்தவளான கிருஷ்ணை க்ஷத்ரியர்களுக்கு நாசத்தை
ண்டாக்கப்போகிறாள். அழகிய இடையுள்ள இவள் காலம்வரும்
பாது * தேவகாரியத்தை நிறைவேற்றப்போகிறாள். இவள்காரண
ாக க்ஷத்ரியர்களுக்குப் பெரியபயம் உண்டாகப்போகின்றது" என்று
சரீரிவாணி சொல்லிற்று. அதைக்கேட்டுப் பாஞ்சாலர்கள் அனை
ரும் ஸிம்மக்கூட்டம்போல் கர்ச்சித்தனர். ஸந்தோஷம்நிரம்பின
வர்களை இந்தப்பூமி தாங்காமற்போயிற்று. மஹாத்மாவாகிய துரு
தனுக்கு இனியவர்களும் மனிதர்களிற்சிறந்தவர்களும் ராஜலக்ஷ்மி
கப்பொருந்தினவர்களும் க்ஷத்ரியர்க்குரிய சரீரஅமைப்புள்ளவர்க
ுமாகிய குமாரகுமாரிகளிருவரும் அவ்வாறுபிறந்தனர். அவர்களைக்
ண்டபிறகு அந்தப்பிருஷதி சந்ததியைவிரும்பி, "இவர்களிருவரும்
ன்னைத்தவிர வேறொருத்தியைத் தாயாராக அறியாமலிருக்கவேண்
ம்" என்று யாஜரைச் சரணமடைந்தாள். யாஜர் ராஜாவின்விருப்
த்தைச்செய்யக்கருதி அவளுக்கு அப்படியேஆகட்டுமென்றுசொன்
ர். பயப்படாமல், † த்ருஷ்டனாயிருப்பதனாலும், த்யும்னம்என்னப்
ட்ட பொன்மயமான கவசகுண்டலமுதலானவற்றோடு பிறந்ததனா
ும், இந்தத்துருபதனுடையகுமாரன் த்ருஷ்டத்யும்னன்என்றபெய
ாடிருக்கட்டும்" என்றும், "இந்தக்கன்னிகை நிறம்கருமையாயிரு
பதனால் கிருஷ்ணையென்றபெயருள்ளவளாயிருக்கட்டும்" என்றும்
ராம்மணர்கள் ஸந்தோஷம்நிரம்பினமனத்தோடு அவர்களிருவருக்
ும் பெயர்களிட்டனர். அவ்வாறு அவ்விருவரும் துருபதனுக்கு
ஹாயாகத்தில் பிறந்தனர். அதன்பின் திருஷ்டத்யும்னன் வேதாத்
யனத்தில் பாரங்கதனானான். பராக்ரமசாலியாகிய துரோணர் துரு
தபுத்திரனாகிய திருஷ்டத்யும்னனைத் தம்வீட்டிற்கழைத்துவந்து
ஸ்த்ரவித்தை சொல்லிவைப்பதற்காக உபாகர்மமென்றுசொல்லப்
ட்ட வித்தியாரம்பத்தைச்செய்தார். சிறந்தஞானமுள்ள துரோ
ார் அவசியம்நேரிடத்தக்கவிதியை விலக்கமுடியாதென்றுநினைத்
த் தமதுகீர்த்தியைக்காப்பாற்றிக்கொள்வதற்காக அங்ஙனை அவ்

* பூபாரத்தைபொழிப்பது. † த்ருஷ்டன் = ஜயிக்கமுடியாதவன்.

வாறுசெய்தார். அவனும் உயர்ந்தபுத்தியினால் எல்லா அஸ்திரங்களை
யும் சீக்கிரத்தில் கிரஹித்துக்கொண்டான்" என்றார்.

---

நூற்றைம்பதாவது அத்தியாயம்.

---

ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)

---:o:---

(துருபதனுடைய ஜனனம்.)

ஜனமேஜயர், "பிரம்மரிஷியே! துருபதனுடைய ஜனனத்தை
யும் கேட்க விரும்புகிறேன். அவன் எவ்வாறு பிறந்தான்? எவ்
வாறு அஸ்திரங்களையடைந்தான்? பகவானே! பிராம்மணோத்தமரே!
இதனை உங்களிடம் செவ்வையாகக்கேட்க விரும்புகிறேன்; அவ
னுடைய பிறப்பைச்சொல்லும்போது கேட்கக்கேட்க எனக்கு மே
மேலும் விருப்பமிகுகின்றது" என்றுசொல்ல, வைசம்பாயனர் சொ
லுகிறார்:

"பாஞ்சாலதேசத்தரசன் புத்திரனைவிரும்புகிறவனாக இரு
தான். அந்தமஹாராஜா புத்திரனுக்காக வனஞ்சென்று கடுமையா
தவமுள்ளமஹரிஷிகளுக்கு முயற்சியோடு சுச்ரூஷைசெய்துகொண்
மிக்க கடுந்தவத்தைச்செய்தான். ராஜாவே! மான்கூட்டங்களோ
கூடியவனத்தில் புத்திரனுக்காக அவன் தவஞ்செய்துகொண்டிரு
க்கும்போது வெகுகாலமாயிற்று. மிகுந்ததேஜஸுள்ள அந்த அரசன்
சிலகாலம் காற்றைப்புஜித்துக்கொண்டும் சிலகாலம்ஆகாரமில்லாம
லும் கடுந்தவம்புரிந்தான். ராஜச்ரேஷ்டரான பரதவம்சத்து மஹா
ராஜாவே! அந்த மஹாவீரன் அவ்வாறிருக்கையில் நெடுங்காலம்
சென்றது. பரதச்ரேஷ்டரே! பிறகு சிலநாளைக்கெல்லாம் காமத்தை
விருத்திசெய்யத்தகுந்த வஸந்தகாலத்தில் பிராணிகளின்மனங்களை
மிகவும்கவருவதான புஷ்பித்தஅசோகவனத்தில் தாமரைமலர்போ
ன்றகண்ணையுடையவனான அவ்வரசன் கங்காநதிக்கரைக்குச்சென்று
அங்கே தவத்திலிருந்துகொண்டிருந்தான். ராஜாவே! பிறகு சில
காலத்துக்கெல்லாம் அந்தவனத்திற்கு மேனகையென்றுபெயர்பெற்ற
அப்ஸரஸ்வந்து அங்கே புஷ்பித்தமரங்களில் மறைந்துகொண்டுவரு
கையில் ராஜாவின்பார்வைக்கு எதிர்ப்பட்டாள். ராஜாவே! அவ்வி
டத்தில் ஆஸனத்திலிருந்தஅரசனை அவள்பார்க்கவில்லை. ராஜாவுக்கு
மட்டும் அந்தஅப்ஸரஸைப்பார்த்ததனால் வீரியம் பூமியில்விழுந்தது.
ராஜச்ரேஷ்டரே! தீர்க்காயுஸ் உள்ளவரே! மனிதர்களுக்குப் பிரபு
வாகிய அவ்வரசன் வெட்கத்துடன் கால்களினால் அதனை மறைத்தான்

திலிருந்து துருபதன் உண்டானான். பாரதரே! அப்போது பரி த்தமானமனத்தையுடைய அந்தராஜரிஷியின் தவவன்மையினால் ால்வைத்தவுடன் புத்திரன் உண்டானதனால் தபோதனர்களும் த்வான்களுமான ரிஷிகளெல்லோரும்சேர்ந்து அவனுக்குத் *துரு தன் என்று பெயர்வைத்தனர். ராஜாக்களுக்கெல்லாம் உத்தம னராஜாவே! பாரதரே! அவன் அந்தப்பாரத்வாஜருடைய ஆச்ர த்திலேயே விரும்பினவற்றையெல்லாம் அடைந்து மிகவும்ஸுகமாக ளர்ந்தான். ராஜேந்திரரே! பிரபுவாகிய பாஞ்சாலதேசத்தரசனும் ந்தப்புத்திரனை வித்தியாப்யாஸத்திற்காக மஹாத்மாவான பரத் ஜரிடம் ஒப்புவித்துத் தனது ராஜ்யத்திற்குச்சென்றான். ராஜாவே! ாரதரே! பிறகு அந்தக்குமாரன் துரோணருடன்சேர்ந்து அந்தக் ட்டில் வேதங்களையும் வேதாங்கங்களையும் தனுர்வேதங்களையும் ப்யஸித்தான். அவன் அந்தவனத்தில் மிகுந்தஸந்தோஷமுற்று ுகமாகத்திரிந்தான். ராஜாவே! அவன் இவ்வாறு அந்தக்காட்டி ள்ளவர்களோடுகூடியிருக்கையில் வெகுகாலத்திற்குப்பிறகு அவ டைய தந்தை ஸ்வர்க்கமடைந்தான். அப்போது பாஞ்சாலர்கள் ேர்ந்து அவனைப் பாஞ்சாலதேசாதிபதியாகப் பட்டாபிஷேகஞ்செய் னர். அரசர்க்கரசே! அவன்ராஜ்யத்தைபடைந்தபின் நண்பர்களுக்கு ஸந்தோஷத்தை விருத்திசெய்துகொண்டு இந்திரன் ஸ்வர்க்கத்தை க்ஷிப்பதுபோல் கிரமமாக ராஜ்யபரிபாலனஞ்செய்தான். ராஜச்ரேஷ் டரே! இந்தத்துருபதனென்னும் ராஜரிஷியின்பிறப்பும் திருஷ்டத்யும் னுடையபிறப்பும் நடந்தபடி என்னால் உமக்குச் சொல்லப்பட்டன.

---

## நூற்றைம்பத்தோராவது அத்தியாயம்.

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)

(தர்மாராஜாவுக்கு யௌவராஜ்யபட்டாபிஷேகமும், பலராமரிடம் பீம ஸேனன் கதாயுத்தம்கற்றுக்கொண்டதும், துரோணர் அர்ச்சுன னுக்குப் பிரம்மசிரஸ்என்னும்அஸ்திரத்தைப்பற்றியவிதிகளை வித்ததும், பீமார்ச்சுனர்கள் திக்குவிஜயஞ்செய்ததும்.)

"ராஜேந்திரரே! கௌரவபுத்ரராகிய யுதிஷ்டிரர் ராஜ்யத்தை க்ஷிப்பதில் ஸமர்த்தரென்றறிந்து அவருக்கு யுவராஜ்யபட்டாபிஷே ஞ்செய்வதற்காக த்ருதராஷ்டிரன் மந்திரிகளுடன்ஆலோசனைசெய்

* துரு = மரத்தடியில், பதன் = கால்வைத்ததனாலுண்டானவன்.

தான். அப்போது, அந்தத்ருதராஷ்டிரனுடையபுத்ரர்கள் தெரிந் கொண்டு வருத்தப்பட்டனர். ராஜாவே! பிறகு ஒருவருஷத்தி முடிவில் பாண்டுபுத்திரராகிய யுதிஷ்டிரர் த்ருதராஷ்டிரனால் யௌ ராஜ்யபட்டாபிஷேகம் செய்யப்பெற்றார். பிறகு கொஞ்சகாலத்தி குந்தியின்புத்ரராகிய யுதிஷ்டிரர் வினயத்தினாலும் ஒழுக்கத்தினா சாந்தகுணத்தினாலும் தகப்பனாருடைய கீர்த்தியை மறைத்துவி டார். பாண்டுபுத்திரனாகியபீமஸேனன் கத்திச்சண்டையிலும் க யுத்தத்திலும் ரதயுத்தத்திலும் எப்போதும் பலராமரிடம் சிக்ஷை சொல்லிக்கொண்டான். சிக்ஷைமுடிந்தபின் பீமன் பலத்தில் த்யும ஸேனனுக்கு ஒப்பாகஇருந்தான். பராக்கிரமம்நிரம்பினவனாக இரு தும் தன்ஸஹோதரர்களுக்கு உட்பட்டிருந்தான். அர்ச்சுனன் ( ரும் வளைவும் அகலமுமான கத்திபோல் இருபக்கங்களும் கூர்மை யுள்ளபாணங்கள், ஊசிபோன்றநாராசபாணங்கள், *பல்லங்களெ னப்பட்டபாணங்கள், அர்த்தசந்திரபாணங்கள் இவைகளை நழுவாம கெட்டியாகப்பிடிப்பதிலும் துரிதமாகவிடுவதிலும் குறிதவறாமலடி பதிலும் ரஹஸ்யம்தெரிந்து பிரயோகிப்பவனாகஇருந்தான். வேக திலும் அங்கங்களின் அமைப்பிலும் அர்ஜுனனுக்கொப்பானவ உலகத்தில் மற்றொருவனுமில்லையென்று துரோணர் நிச்சயஞ்செ தார். பிறகு துரோணர் கௌரவர்களின்ஸபையில் அர்ஜுனனை பார்த்துப் பின்வருமாறு சொல்லலானார்.

"பாரதனே! அக்நிவேச்யர்என்று க்யாதிபெற்ற என்கு வானவர் முன்னே தனுர்வேதத்தில் அகஸ்தியருடைய சிஷ்யராகஇ ந்தார். நான் அந்த அக்நிவேச்யருடைய சிஷ்யன். நான் இந் வித்தையை ஒரு நல்லபாத்திரத்திலிருந்து மற்றொரு நல்லபாத்திர தில்சேர்க்க ஆரம்பித்தவன். நான் தவத்தினால்அடைந்ததும் வீ போகாததும் வஜ்ராயுதம்போன்றதுமாகிய பிரம்மசிரஸ்என்னும்பெ ருள்ள ஓர் அஸ்த்ரம் இருக்கிறது. அது பூமிமுழுமையும்தகித் விடும். என்குரு எனக்குக்கொடுக்கும்போது, 'பாரத்வாஜபுத்தி னே! நீ இந்தஅஸ்த்ரத்தை யுத்தத்தில் மனிதர்கள்மீது பிரயோகி கத்தகாது. அவர்கள் சக்தியில்குறைந்தவர்கள்' என்று சொல் யிருக்கிறார். மிகுந்தபராக்ரமமுள்ளவனே! உன்னுடன் மறைந் யுத்தம்செய்யத்தக்க தேவாஸுரர்முதலிய பூதம் எதுவாயிருந் லும் அதை யுத்தத்தில் இந்த அஸ்த்ரத்தினால் நீகொன்றுவிடலா வீரனே! உனக்குக்கிடைத்த இந்தஅஸ்த்ரம் தேவலோகத்தத

* முன்னும்பின்னும் முள்ளுள்ளபாணங்கள்.

ன்னைவிட வேறொருவன் இதற்குத்தகுதியுள்ளவனல்லன். ராஜா வ! அக்னிவேச்யமுனியினால் எனக்குவிதிக்கப்பட்ட *வியவஸ்தை ய நீகாப்பாற்றவேண்டும். உன்உறவினர்முன்பாக எனக்கு நீ குரு க்ஷிணைகொடு" என்றார். அர்ச்சுனன், "கொடுக்கிறேன்" என்று ரதிஜ்ஞைசெய்தபின் குருவான துரோணர், "குற்றமற்றவனே! த்தகாலத்தில் நான் யுத்தம்செய்யும்போது நீ எனக்கு எதிர்யுத்தம் சய்யவேண்டும்" என்றுகேட்டார். கௌரவர்களிற்சிறந்த அர் னன் "அப்படியே ஆகட்டும்" என்று துரோணருக்கு வாக்குத் த்தஞ்செய்து அவர்பாதங்களைத்தொட்டு வந்தனஞ்செய்து வணக்க ாகச் சமீபத்திலிருந்தான். துரோணர் அர்ஜுனனைத்தழுவிக் காண்டு, "பார்த்தனே! இவ்வுலகத்தில் எல்லாஆயுதங்களாலும் த்தஞ்செய்வதிலும் உனக்குஈடாக எந்தமனிதனையும் நான்ஒருகா ம்செய்வதில்லையென்று முன்னமே நான் உனக்குச்சொல்லியிருந் தைச் செவ்வைபாகநிறைவேற்றிவிட்டேன். உனக்கு ஈடானவ ல்லை. தேவர்களாகட்டும் தைத்தியர்களாகட்டும் தானவர்களாகட் ம் யுத்தத்தில்உன்னையெதிர்க்க வல்லவரல்லர். நானே யுத்தத்தில் ன்னைவிடச் சிறந்தவனல்லன். மற்றமனிதர்களைப்பற்றிச் சொல்ல வண்டுமா? யாதவகுலத்திற்பிறந்தவரும் கம்ஸனையும் காளியனையும் கஞ்செய்தவரும் தாமரைமலர்போன்ற கண்களையுடையவருமான வான் ஒருவர்தாம் இவ்வுலகத்தில் உனக்குமேற்பட்டவர். அவர் ல்லாலோகங்களையும் ஜயிப்பவர்; எல்லாஆயுதங்களையும் தரிப்பவர். ர்ஜுனா! இதனால் இப்போது நான் உனக்குப்பொய்சொன்னவ கேன். உலகமெல்லாம் அவரால் காக்கப்படுகிறது. அவரிடம் லயமா போகிறது. அவரிடமிருந்துதான் உண்டானது. அவருடையபஸ்வ பத்தைப் பிரம்மா ஈசானர்முதலியவரும் அறியார். அவருடையநாபி லுண்டானபிரம்மா ஸர்வப்பிராணிகளையும் படைத்தவர். உலகத்தின் ருஷ்டிஸ்திதிஸம்ஹாரங்களுக்குக் கர்த்தாவும் உலகமனைத்துமாக ருப்பவரும் அந்தக்கிருஷ்ணபகவானே. இறந்ததும் நிகழ்வதும் நவதுமாகிய பிரபஞ்சமும் அவரே. அவர் பரமபுருஷர்; நித்தி ; எங்கும் வியாபித்தவர்; விகாரமற்றவர்; அசைவற்றவர்; எப்போ ம் ஒரேவிதமாகஇருப்பவர்; போகமேமூர்த்தீகரித்த அந்தக்கிரு ணமூர்த்தி உலகத்தைக்காப்பாற்றுவதற்கு லீலையாக அவதாரஞ் சய்திருக்கிறார். அவருக்கொப்பானவர் பிறக்கவுமில்லை; பிறந்தது ல்லை; பிறக்கப்போவதுமில்லை. ஜங்கமங்களுக்கும் ஸ்தாவரங்களுக்

* மனிதர்களிடம்பிரயோகிக்காமலிருப்பது.

கும் பிதாவும் பூஜ்யருமாகிய அவர் உனக்கு மாதுல புத்ரராயிருக்கிறார். தனது நன்மையையறிந்த எந்தமனிதன் அவரைஜயிக்கவிரும்புவன்? அவர் உனக்கு மைத்துனரும் ஸ்நேஹிதருமாவார். அவருக்கும் நீ உயிர்போன்ற அன்பனுவாய். அவருக்கு உன்னிடத்தில் சினேகம் அதிகமாகவும் உனக்கும் அவரிடத்தில்நேசம் உறுதியாகவுமிருக்கும். அதனுல் உனக்கு அவருடன்விளையாட்டாகவும் யுத்தம் நேராது. மேலும் முன்னே கிருஷ்ணன் நந்தகோபருடையகோகுலத்தில் வளர்ந்துகொண்டிருந்தபோது இந்திரன் அவரிடம் உன் விஷயமாக, "என்னுடைய அம்சமானவனும் பூலோகத்தில் புருஷர்களில் உத்தமனும் குந்திபுத்ரர்களில் கனிஷ்டனும் சிறந்தவீரனும் பாண்டுபுத்ரனுமாகிய அர்ச்சுனனென்பவன் பூபாரத்தைபொழிப்பதில் உமக்குஉதவிசெய்யப்போகிறுன். பிரபுவே! அவனுக்காக அபயம்கொடும். நம்மைப்பற்றி அவனைக்காப்பாற்றும்" என்றுகேட்டுக்கொண்டான். அர்ச்சுன! சங்கசக்கரகதாதரரும் லக்ஷ்மீபதியுமான செந்தாமரைக்கண்ணர் இவ்வாறு இந்திரனுல் கேட்டுக்கொள்ளப்பட்டபோது அவனைப்பார்த்து, "பாண்டுவம்சத்திற்பிறந்தவனும் மிகுந்ததர்மிஷ்டனும் அஸ்த்ரம்பிடித்தவர்களெல்லாரிலும் சிறந்தவனும் என் அத்தைமகனுமாகிய அர்ச்சுனனை நான் அறிவேன். எல்லாலோகங்களிலும் மஹாவீரனும் உன் அம்சமுமாகிய அவனை நான் காப்பாற்றுவேன். எங்களிருவருடைய ஸ்நேஹத்தைப்போன்றஸ்நேஹம் உலகத்தில்இருக்கப்போகிறதில்லை. அவனிடம்பக்தியுள்ளவனெவனே அவன் என்னிடத்திலும்பக்தியுள்ளவன். அவனைவிரோதிப்பவனெவனே அவன் என்னையும்விரோதிப்பவன். என்னுடையதனமெல்லாம் அவனுடையது. அவனில்லாமல் நான் ஜீவிக்கமாட்டேன்" என்றார். அர்ச்சுன! ஸர்வேஶ்வரரானகிருஷ்ணன் இந்திரனுக்கு முன்னே இவ்வாறுரைத்திருக்கிறார். ஆதலால், உனக்குஒப்பானவனும் அதிகமானவனுமாகியபுருஷன் அவரைவிடவேறொருவனும் இவ்வுலகத்தில் உண்டாகப்போவதில்லை. நீ அவரையே சரணமடை. தேவர்க்குந்தேவராகிய ஜனார்த்தனர் எல்லாப்பிராணிகளையும் காப்பதற்குரியவர்" என்றார். அர்ச்சுனன் ஸரியென்று துரோணரிடம்ஒப்புக்கொண்டு அவருடையபாதவந்தனஞ்செய்தபிறகு தர்மராஜாவுக்குக் கீழ்ப்படிந்தவனுக இருந்தான். உலகத்தில், "அர்ச்சுனனைப்போன்றவில்லாளி ஒருவனுமில்லை" என்றபெயர் கடல்சூழ்ந்தபூமியெல்லாம் தானுகவேபரவியது. பாண்டவனுனதனஞ்சயன் கதாயுத்தத்திலும் கத்திச்சண்டையிலும் தேர்ச்சண்டையிலும் வில்யுத்தத்திலும் பாரங்கதனுக

இருந்தான். நீதிவரூத ஸஹதேவனும் நீதிசாஸ்திரஜ்ஞானம் எல்லா வறையும் தேவேந்திரனிடமிருந்து அடைந்து அஸ்த்ரசஸ்த்ரங்களி லும் சாஸ்திரங்களிலும் தேர் யானை குதிரைகளின்பழக்கத்திலும் பாண்டித்தியத்தைபடைந்து ஸஹோதரர்களுக்குட்பட்டிருந்தான். இவ்வாறே, துரோணராற்கற்பிக்கப்பட்டவனும் சகோதரர்களுக்கு அன்பனுமாயுள்ள நகுலன் சித்திரயுத்தம்செய்பவனாகவும் அதிரதர் களிற்சிறந்தவனாகவும் பெயர்பெற்றிருந்தான். கந்தர்வர்களின்விரோத மிருந்தும் மூன்றுவருஷங்கள் தடையின்றி யஜ்ஞஞ்செய்துமுடித்தவ னாகிய ஸௌவீரனென்னும் அரசன் அர்ச்சுனன்முதலியபாண்டவர்க ளால் போரில்கொல்லப்பட்டான். வீரனாகியபாண்டுவும் எவனைப்படக் கொல்லேயோ அந்த யவனதேசத்ததிபதியாகியஸௌவீரராஜன் அர்ச் சுனனால்ஜயிக்கப்பட்டான். மிக்க பலம்நிரம்பினவனும் கௌரவர்க ளைப்பற்றி எப்போதும் கோபமுள்ளவனுமாகிய விபுலனென்னும்பெய ருள்ள அந்தஸௌவீரதேசத்தரசன் சிறந்தபுத்திமானாகிய அர்ச்சுன னால் கொல்லப்பட்டான். யுத்தத்தில் ஜயிக்கிறநிச்சயத்தோடுகூடிய வனும் தத்தாமித்ரனென்று மற்றொருபெயருள்ளவனுமாகிய ஸுமி த்ரனென்னும் ஸௌவீர அரசனையும் அர்ச்சுனன் பாணங்களால்ஜயித் தான். பீமஸேனனைச் சகாயமாகக்கொண்ட அந்த அர்ச்சுனன் கிழக் குத்தேசத்தவர்களான பதினாயிரம் மஹாரதர்களைத் தான் ஒற்றைத் தேராளியாகவேயிருந்து ஜயித்தான். அப்படியே ஒரேரதிகனாகச் சென்று தென்திசையைஜயித்தான். தனஞ்சயன் தனக்குவியலைக் குருதேசத்திற்கொண்டுவந்துசேர்த்தான். அவன் பதினைந்தாவது வயதில் இதையெல்லாம்செய்ததனால் அவனைக்கண்டு த்ருதராஷ் டிரபுத்ரர்களுக்குப் பயமுண்டாயிற்று. சிறந்தகைகளையுடையவனும் பலவான்களிற்சிறந்தவனுமாகிய எந்தப்பீமஸேனன் த்ருதராஷ்டிரபுத் ரர்களெல்லாருக்கும் தன்பலத்தினால் அபகாரஞ்செய்தானோ அந்தக் கெட்ட எண்ணமில்லாத பீமஸேனனைக் குற்றத்தையேநாடும் த்ருத ராஷ்டிரபுத்ரர்களனைவரும் அவனுடையசெய்கையினாலுண்டான பய த்தினால் குற்றமுள்ளவனாகநினைந்தனர். அவனுடையசெய்கைகளைக் கண்டும், பாண்டவர்களெல்லாரும் புகழ்பெற்றுப் பலத்தினால் அனேக மடங்கு அதிகரித்திருப்பதைக்கண்டும், த்ருதராஷ்டிரபுத்ரர்கள் தங்க ளுக்குத்தீங்குவருவதைநினைத்து அவர்களிடம் பயந்தனர். இவ்வாறு புருஷச்ரேஷ்டர்களும் மஹாத்மாக்களுமாகிய பாண்டவர்களனைவ ரும் முன்னே அபல்தேசங்களைஜயித்துத் தங்கள்தேசத்தைவிருத்தி செய்தனர். பிறகு வலியவில்லாளிகளாகிய பாண்டவர்களின்பலம்

மிகப்புகழ்பெற்றிருப்பதைத்தெரிந்துகொண்ட த்ருதராஷ்டிரனுக் பாண்டவர்களிடமிருந்தஎண்ணம் உடனேகெட்டுப்போயிற்று. அ மாகக் கவலையடைந்திருந்த அவ்வரசனுக்கு ராத்திரியில் நித்தி வரவில்லை.

---

நூற்றைம்பத்திரண்டாவது அத்தியாயம்.

---

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)

---:o:---

(யுதிஷ்டிரநுக்கு ராஜ்யாபிஷேகஞ் செய்யும்படி நகரத்துஜனங்கள் சொ னதைக்கேட்டுத் துயரழற்றுத் துரியோதனன் தந்தையிடம்பேசுவது.)

பலத்திற்சிறந்த பீமஸேனனையும் வித்தையிற்சிறந்த அர்ச னையும்கண்டு துரியோதனன் துக்கத்தினால்பரிதபித்தான். பி சூரியபுத்திரனானகர்ணன், ஸுபலன்புத்திரனான சகுனிமுதலா கள் அனேகஉபாயங்களால் பாண்டவர்களைக் கொல்லக்கருதி பாண்டவர்களும் விதுரருடையபுத்திமதியையனுஸரித்து வெளிச் ட்டாமல் அவையெல்லாவற்றிற்கும் கூடியவரையிற் பரிகாரஞ்செ னர். பாரதரே! அந்தக்காலத்தில் நகரத்துஜனங்கள், பாண்டுபுத்ரர் குணங்களெல்லாம்சேர்ந்திருப்பதைக்கண்டு அவர்களின்குணங்க பற்றி ஸபைகளில்பேசினர். அப்போது நாற்சந்திகளிலும் ஸ களிலும் ஜனங்கள்கூடி ராஜ்யலாபம்பெற்ற பாண்டுபுத்திரர்க ஜ்யேஷ்டரான யுதிஷ்டிரரைப்பற்றிப் பேசினர். "அறிவேகண் வுடைய த்ருதராஷ்டிரராஜன் கண்ணில்லாமையால் முன்னமேராஜ் அடைந்திருக்கவில்லை. அவன் இப்போது ராஜாவாவதெப்படி? ஸ ஸந்தரும் சிறந்தநியமமுள்ளவருமாகிய சந்தனுபுத்ரரான பீஷ் முன்னே ராஜ்யத்தை மறுத்துவிட்டு இப்போது ஒருகாலும் அ கரிக்கமாட்டார்; ஆதலால், நாம் இளையவரும் முதிர்ந்தகுணமு வரும் ஸத்யமும்தயையுமுள்ளவருமாகிய பாண்டுபுத்ரர்களில்ஜ்யே டரை இப்போது ராஜ்யாபிஷேகஞ்செய்யவேண்டும். அதுதான் எ தர்மந்தெரிந்த அந்தயுதிஷ்டிரர் சந்தனுபுத்ரரான பீஷ்மரையும் த் ராஷ்டிரனையும் த்ருதராஷ்டிரபுத்ரர்களையும் மேன்மைப்படுத்திப் வகையான ராஜபோகங்களையுமளிப்பார்" என்றனர். கெட்டபுத் யுள்ள துரியோதனன் யுதிஷ்டிரரிடத்தில்நேசம்வைத்துப் பேசுகி அந்தஜனங்களுடைய அந்தவசனங்களைக்கேட்டுத் துயரமுற்று

ட்டசித்தமுள்ள துரியோதனன் மனக்கொதிப்புற்றவனுகி அவர் ர்பேசுவதைப்பொறுக்கவில்லை; பொருமையினுல் அதிகதாபத்தை டைந்து த்ருதராஷ்டிரனிடம் சென்ருன்; அப்போது அவன் பிதா வைத் தனிமையில்கண்டு மரியாதைசெய்து, பிறகு நகரத்துஜனங்கள் ஷ்டிரரிடம்வைத்திருக்கும் அன்பினுலுண்டான துயரத்துடன் ன்வருமாறுசொல்லத்தொடங்கினுன் :

"பிதாவே! பிதற்றுகின்ற நகரத்துஜனங்களுடைய அயோக் மானபேச்சுக்களை நான்கேட்டேன்; உம்மையும் பீஷ்மரையும் அவ த்து, பாண்டுபுத்ரன் ராஜாவாயிருப்பதை விரும்புகின்றனர். பீஷ் ராஜ்யபரிபாலனத்தை விரும்புகிறதில்லை. இஃது அவருடைய றுதி. பட்டணத்திலுள்ளஜனங்கள் நமக்குத்தான் துயரத்தையுண் க்கவிரும்புகின்றனர். பாண்டு முன்னே தன்னுடையகுணங்களி ல் தந்தையினிடமிருந்து ராஜ்யத்தைப்பெற்ருன். உமக்குக்கண் ரியாமையென்னும்குற்றமிருந்ததனுல் உமக்குரியராஜ்யத்தை நீர் டையாமல்போனீர். இந்தப்பாண்டவன் பாண்டுவின்தாயபாகமாக ஜ்யத்தையடைந்தால், அவன்புத்திரன் நிச்சயமாக ராஜ்யத்தை டைந்தவனே. அவன்புத்திரனும் அவனுக்குப்புத்திரனும் அவ் றுதான். ராஜாவே! ஆதலால், நாங்கள் எங்கள்ஸந்ததிகளுடன் ட ராஜவம்சமில்லாமல் உலகத்தில் அவமதிக்கப்பட்டிருப்போம். ஜாவே! எப்படிச்செய்தால் நாங்கள் எப்போதும் பிறர்அன்னத் ற்குக்காத்திருந்து நரகம்போன்றதுக்கத்தை அனுபவிக்காமலிருப் பாமோ அப்படிப்பட்டநீதியை நீங்கள் செய்யவேண்டும். ராஜாவே! ந்தராஜ்யத்தை முன்னமே நீரடைந்திருப்பீராயின் ஜனங்களுக்கு நுப்பமில்லாமலிருந்தபோதிலும் நாங்கள் நிச்சயமாக ராஜ்யத்தை டைவோம்" என்ருன்.

தன்புத்திரன் இவ்வாறுசொன்னதைக்கேட்டு, த்ருதராஷ்டிரன் றுநேரம் சிந்தித்து, பிறகு துரியோதனனைநோக்கி, "கௌரவ கியபாண்டு தர்மந்தவருதவன்; என்னிடத்திலும் என்னைச்சார்ந்த ாதிகளெல்லாரிடத்திலும் விசேஷமாக அன்புவைத்திருந்தவன். மந்ததர்மிஷ்டனுகிய பாண்டு இந்தவுலகத்தில் போஜனமுதல் ஒன் றயும் தனக்குவேண்டுமென்று நினைப்பதில்லை. அவற்றையெல்லாம் ன்னிடம்தெரிவிப்பான். பாண்டுவைப்போலவே அவன்புத்திரனும் ப்போதும் தர்மத்தைவிடாதவன்; குணங்கள்நிரம்பினவன்; உலகத் ல் பிரக்யாதிபெற்றவன்; நகரத்திலும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிருன். ணிநரிற்சிறந்தவனுகிய அவன் நம்மால் எவ்வாறுகுறைக்கக்கூடிய

வன்? நமதுராஜ்யத்தை அவன் அடைந்தேயிருக்கிறான். ஸஹாய ளும் அவனுக்கு விசேஷமாக இருக்கின்றனர். பாண்டுவினால் மந் கள் எப்போதும் ஆதரிக்கப்பட்டிருந்தனர். ஸேனைகளும் மதிக் பெற்றிருந்தன. அவர்களின்புத்திரர்களும் பௌத்திரர்களும் விசே மாக ஆதரிக்கப்பட்டனர். குழந்தாய்! பாண்டுவோடு அவ்வாறுட கினதேசத்திலுள்ள அந்தமனிதர்கள் யுதிஷ்டிரனுக்காக நம்மை நம்மைச்சேர்ந்தவர்களையும் எவ்வாறுகொல்லாமலிருப்பார்கள்? இ ஜனங்கள் நாம்தர்மத்தைவிட்டால் முக்கியமாக நம்தேசத்திலே இருக்கவிரும்பார். குழந்தாய்! அப்படிப்பட்ட நாம் மஹாத்மாக்க கிய இந்தக்கௌரவராஜர்களுக்கும் உலகத்துக்கும் எவ்வாறு பழிக்க தகாதவர்களாவோம்?" என்றுசொன்னான். அதைக்கேட்ட துரிே த்தனன், "பீஷ்மர் எப்போதும் ஒருபக்ஷத்திலும்சேராதவர். து ணருடைய புத்திரர் என்பக்ஷத்திலிருக்கிறார். புத்திரரிருக்கிறபக்ஷ தில் துரோணரிருப்பார். இதில் ஸந்தேகமில்லை. சாரத்வதராகி கிருபரும் நமதுபக்ஷத்திலேயேயிருப்பார். ஏனெனில், அவர் மரு ராகிய அசுவத்தாமாவை எவ்வகையிலும்விடார். விதுரர் நமக்கு பந்து; ஆனால் எதிரிகளிடம் வெளிப்படாமல் மறைவாக அன் வைத்திருக்கிறார்; நம்மைஎதிர்ப்பதற்குச் சமர்த்தரல்லர். நம்மிட தில் சங்கைப்படாத பாண்டவர்களை அவர்கள் தாயாருடன்கூட இ போதே வாரணாவதத்திற்கு அனுப்பிவிடும். இதில் குற்றம்உண்ட காது. உள்ளத்தில் ஆணிஅடித்ததுபோல் பொறுக்கமுடியாதது தூக்கத்தைக்கெடுப்பதுமாகக் கிளம்பியிருக்கிற வ்யஸனமென்னு தீயை இந்தச்செய்கையினால் அவிக்கக்கடவீர்" என்றுசொன்னான்.

---

## நூற்றைம்பத்துமூன்றாவது அத்தியாயம்.

---

## ஸம்பவபர்வம். (தொடர்ச்சி.)

—:0:—

(கணிகர் த்ருதராஷ்டிரனுக்குக் கெட்டநீதி உபதேசிப்பதும், ஜம்புகோபாக்யானமும்.)

பாண்டுபுத்ரர்கள் வீரர்களாகவும் அதிகபலமும் அதிகபராக்ர முமுள்ளவர்களாகவுமிருப்பதைக் கேள்வியுற்று த்ருதராஷ்டிரமஹா ராஜா வ்யஸனத்தினால் சிந்தையுற்றான். பிறகு ராஜ்யஆலோசனைதெரி

வரும் ராஜநீதிசாஸ்திரத்தின் ரஹஸ்யத்தைச் செவ்வையாகஅறிந்த ருமாகிய கணிகரென்னும் மந்திரிச்ரேஷ்டரையழைத்து த்ருதராஷ்ரன், "பிராம்மணச்ரேஷ்டரே! பாண்டவர்கள் எப்போதும் கர்வமுள்ளவர்களாயிருக்கின்றனர். அவர்களை நான்வெறுக்கிறேன். கணிகரே! அவர்கள்விஷயத்தில் சந்திவிக்ரஹங்களைச்செய்வதற்கு மிக்க நிச்சயமானஉபாயத்தை நீர் எனக்குச்சொல்லும். நீர்சொல்வதைச் செய்வேன்" என்றுசொன்னான். பரதச்ரேஷ்டரே! பிறகு துரியோதனன், சகுனி, கர்ணன், துச்சாஸனன் இவர்கள் சகுனியின்மந்திரியாகிய கணிகரைவந்தனஞ்செய்து பாண்டவர்களைப்பற்றிப் பலவகையாகக்கேட்டனர். "பாண்டவர்கள் எப்போதும் ஜாக்கிரதையோடிருக்கின்றனர். அவர்களிடத்தில் நாங்கள்பயப்படுகிறோம். பாரத்வாஜரே! நம்மைச்சேர்ந்தவர் எல்லாருக்கும் குறைவின்றி க்ஷேமத்தையுண்டாக்குவது எது? நாம்எவ்வகையாகக் காரியங்களைச்செய்யவேண்டுமென்பதைச்சொல்லுங்கள்" என்றனர். த்ருதராஷ்டிரனால் கேட்கப்பட்ட அந்தப்பிராமணோத்தமர் தெளிந்தமனஸோடு ராஜசாஸ்திரத்தின்ரஹஸ்யத்துக்கு நிதர்சனமான ஒருகொடியசொல்லைச்சொல்லலானார். "ராஜாவே! குற்றமற்றவரே! அந்தவிஷயத்தில் நான்சொல்லப்போவதைக்கேளும். கௌரவச்ரேஷ்டரே! நான்சொன்னதைக் கேட்டபிறகு என்மேல் கோபம்செய்யத்தகாது. ராஜாவானவன் எப்போதும் தண்டிப்பதற்கு முயற்சியுள்ளவனாக இருக்கவேண்டும். பராக்கிரமத்தை வெளிப்படுத்திக்கொண்டு தன்னிடத்தில் பிறர்பிரவேசிக்க மார்க்கமில்லாமல் பிறரிடம் தான்பிரவேசிக்கமார்க்கத்தைக் கண்டு அதில்பிரவேசிப்பவனாகவும் எப்போதுமிருக்கவேண்டும். எப்போதும் தண்டிப்பதற்குமுயற்சியுள்ளவனாகஇருப்பவனிடத்தில் ஜனங்கள் மிக அச்சப்படுவர். ஆதலால், எல்லாக்காரியங்களையும் தண்டத்தினாலேயே ஸ்தாபிக்கவேண்டும். தன்னுடையகுற்றத்தைப் பிறரறியாதபடிசெய்யவேண்டும். பிறரைத் தவறும்தருணத்தில் எதிர்க்கவேண்டும். ஆமை தன் அங்கங்களை வைத்துக்கொள்வதுபோல் ராஜாங்கங்களை ரஹஸ்யமாக வைத்துக்கொள்ளவேண்டும். தனக்குக் குறைவுவராமல் காத்துக்கொள்ளல்வேண்டும். தன்நன்மையைவிரும்புகிறஅரசன் பிராமணர்களை எப்போதும் பூஜித்தல்வேண்டும். பிராம்மணர்களைக்காக்கவும் துஷ்டர்களையடக்கவுந்தான் அரசன்படைக்கப்பட்டிருக்கிறான். துஷ்டநிக்ரஹமும் சிஷ்டபரிபாலனமுமாகியஇரண்டினாலும் தர்மம்விருத்தியாகின்றது. தர்மம் விருத்தியாவதனால் இம்மைமறுமையாகிய இரண்டுலோகங்களும் ஜயிக்கப்படுகின்றன.

ஆதலால் தர்மத்தைச்செய்யவேண்டும். எந்தஅரசன் ஒருமனித குற்றவாளியாயிருப்பதைக்கண்டு மன்னித்துவிடுகிருனே அவ அதனுல் இந்தலோகத்தில் அவமானத்தையும் பரலோகத்தில் நரக த்தையும் அடைகிருன். எவன் ராஜாவினிடத்திலிருந்து உயர்ந்தசெ வத்தையடைந்து அவனுக்குத் தீங்குசெய்கிருனே அந்த அதமனை பிடித்துக்கொன்று அவன்பொருளை ஏழைகளுக்குக் கொடுக்கவேண் டும். காரியத்தை நிர்வஹிக்க நியமிக்கப்பட்டவர்கள் ராஜாவுக்குவச படாமற்போவாராயின், அவர்கள்ஸ்தானத்தில் தர்மசாஸ்திரத்திலு அர்த்தசாஸ்திரத்திலும் நிபுணர்களான பொய்யுரையாத மனிதர்க ராஜா நியமித்தல்வேண்டும். அவ்வாறு நியமிக்கப்பட்டவரெவ அவர்கள் ஜனங்களுக்கு ஆதாரமானதேசத்தையாவது நகரத்தைய வது கிராமத்தையாவது பீடிக்கிருர்களா இல்லையாவென்று பரீக்ஷிப் தற்காக, மாறுவேஷமுள்ள தன்னைச்சேர்ந்த வேலைக்காரர்களைய ப்பவேண்டும். பரீக்ஷைசெய்தபிறகு துஷ்டனை அவனுடையபொரு களையெல்லாம் எடுத்துக்கொண்டு விட்டுவிடவேண்டும். ஒருகா யத்தையாரம்பித்தபிறகு அதைச் செவ்வையாகநிறைவேற்ருமல் ஒ காலத்தும் இருக்கத்தகாது. தைத்தமுள்ளும்கூடப் பிசகாகஎடு கப்பட்டால் வெகுகாலம் புண்ணையுண்டாக்கும். தீங்குசெய்யும் பகை வர்களைக் கொல்வதுதான் சிலாக்கியமென்று சொல்லுகின்றனர். ஆ த்துவருங்காலத்திலெல்லாம் நல்லபராக்ரமமுள்ளவனும் செவ்வையா யுத்தஞ்செய்யத்தக்கவனுமாகிய எதிரியை நன்ருகப்பிளந்து ஓட் விடவேண்டும். அதைப்பற்றி ஆலோசிக்கத்தகாது. ஐயா! சத்ரு பலஹீனனுகஇருந்தபோதிலும் எவ்வகையிலும் அவனை அலக்ஷிய செய்யத்தகாது. சிறியநெருப்பும் பெரியஆதாரத்தைப்பற்றி வன முற்றிலும் எரித்துவிடுகிறது. பொட்டையனுகஇருக்கவேண்டியகால த்தில் பொட்டையனுகஇருக்கவேண்டும்; செவிடனுகஇருக்கவேண் டியகாலத்தில் செவிடனுகவுமிருக்க வேண்டும். வில்லைப் புல்லை போல் செய்யவேண்டும். மான்போல் (எச்சரிக்கையாக) படுக் வேண்டும். ஸாமம்முதலிய உபாயங்களினுல் வசப்பட்டுப்போன ச துருவைக் கொன்றுவிடவேண்டும். சரணமடைந்தவனென்று அ னிடத்தில் தயைசெய்யத்தகாது. அப்படிச்செய்தால்தான் பயமற் ருக்கலாம். கொல்லப்பட்டவனிடம் பயமில்லை. சத்துருவாயிரு பவனையும் முன்அபகாரஞ்செய்தவனையும் *தானத்தினுல் கொன்

---

* அவனுல் நம்பப்பட்ட சமையற்காரன்முதலியவர்களுக்கு லஞ்சம்கொ த்து அவர்களைக்கொண்டு கொல்லவேண்டும்.

டவேண்டும். * மூன்றும் ஐந்தும் ஏழுமாக எதிரிபக்ஷத்திலுள்
வரெல்லாரையும் கொல்லவேண்டும். எப்போதும் எதிர்ப்பக்கத்
ன்வேராகிய ராஜாவைமட்டுமாவது முதலில் அறுக்கவேண்டும்.
தன்பின் அவனுக்குச் சகாயமாயிருப்பவர்களையும் அதற்குப்பிறகு
வர்கள் பக்ஷத்தைச் சேர்ந்தவர்களனைவரையும் கொல்லவேண்டும்.
க்ஷபத்தின் வேர் அறுந்தால் அதைப்பற்றி ஜீவிக்கின்றயாவரும் அழி
வரே. வேரறுத்தமரத்தின்கிளைகள் நிற்பதெவ்வாறு? எப்போதும்
ஜாக்கிரதையுடன் தன்ரஹஸ்யத்தைவெளிப்படுத்தாமலும் எதிரி
ன்ரஹஸ்யத்தை அறிந்துகொண்டுமிருக்கவேண்டும். ராஜாவே! எப்
போதும் விரோதிகளாயிருப்பவர்களிடத்தில் நாள்தோறும் பயத்
தாடேபேநடக்கவேண்டும். அக்நிஹோத்திரத்திலும் யாகத்தி
லும் காஷாயவஸ்திரத்திலும் ஜடைதரிப்பதிலும் தோலுடுப்ப
லும் ஜனங்களை முதலில்நம்பவைத்துத்தான் பிறகு செந்நாயைப்
போல அழிக்கவேண்டும். கருதியபயன்களையடைவதற்கு அக்னி
ஹோத்திரமுதலிய ஆசாரங்கள் துறட்டிபோன்றவை; (அவைகளால்)
பழங்கள்நிரம்பினகிளையைவளைத்துக்கொண்டு பழுக்கப்பழுக்கக் கனி
களைஉதிர்க்கவேண்டும். உலகத்தில் புத்திமான்களானபுருஷர்கள்
விரும்பினபலனைப்பற்றிச்செய்யும்உபாயம் இதுதான். தன் அனுகூல
காலம் திரும்பிவருகிறவரையில் சத்ருவைத் தோளினாற்சுமந்துகொ
ண்டிருக்கவேண்டும்; தன்காலம் மறுபடியும்வந்தவுடன் குடத்தைக்
கல்லிற்போட்டுஉடைப்பதுபோல் உடைத்துவிடவேண்டும். மிகஇர
க்கமானசொல்லைச்சொன்னபோதிலும் பகைவனைவிடலாகாது. அவ
னிஷயத்தில் தயைசெய்யத்தகாது. தீங்குசெய்தவனைக் கொல்ல
வேண்டும். விரோதியை நல்வார்த்தையினாலாவது கொடுப்பதனலா
வது கொல்லவேண்டும். விரோதியைச் சாமத்தினாலாவது தானத்தி
னாலாவது மித்ரபேதத்தினாலாவது யுத்தத்தினாலாவது எல்லாஉபா
யங்களையுஞ்செய்தாவது ஒழித்துவிடவேண்டும்" என்றார். திருத
ராஷ்டிரன், "சாமதானபேததண்டங்களினால் சத்ருவை எவ்வாறு
கொல்லக்கூடும்? அதை எனக்குத் தெளிவாகச்சொல்லும்" என்று
கேட்க, கணிகர்சொல்லத்தொடங்கினார்.

* 'மூன்று: பிரபுசக்தி, மந்திரசக்தி, உற்சாகசக்தி; ஐந்து: மந்திரி, தேசம்,
புகழ், பொக்கசம், ஸேனை; ஏழு: ராஜா, மந்திரி, ஸ்நேகன், பொக்கசம்,
தேசம், அகழ், சேனை' என்பது பழையவுரை.
மூன்று: ராஜா, மந்திரி, மித்ரன்; ஐந்து: முன்சொன்னமூன்றோடு கோசா
தியும், ஸேனாதிபதியும்; ஏழு: முன்சொன்னஐந்துடன் தேசரக்ஷகரும் துர்க்
ரக்ஷகரும். ஏழுவரையும் கொல்லமுடியாவிட்டால் ஐவரையாவது, அதுவும்
முடியாவிட்டுத் மூவரையாவது கொல்லவேண்டும். இதனால் எல்லாமொழியும்.

"மஹாராஜாவே! முன்னே தர்மசாஸ்திரத்தின் ஸூக்ஷ்ம களையறிந்த ஒருநரி காட்டில்வஸித்துக்கொண்டிருந்து செய்தசெ கையைச் சொல்லுகிறேன்; கேளும். தேர்ந்தபுத்தியுள்ளதும் ஸ் காரியத்தைச்சாதித்துக்கொள்வதில் மிக்கசாமர்த்தியமுள்ளதுமா ஒருநரி தன்சிநேகிதர்களாகிய புலி, எலி, செந்நாய், கீரிப்பிள்ளை இவைகளுடன்கூட வாஸஞ்செய்துகொண்டிருந்தது. அந்தநரியு அதன்சிநேகிதர்களும் அந்தக்காட்டில் மிகுந்தவலிமையுள்ள ஒ மான்கூட்டத்தரசைக்கண்டன; அதைப்பிடிக்கத் திறமையில்லாம அங்கே ஆலோசனைசெய்தன. அப்போது, நரி, "புலியே! இந் வனத்தில் இதைக்கொல்வதற்குப் பலமுறை நீ ஆரம்பித்திருக்கிறாய லவா? இஃது இளம்பிராயமுள்ளது; மிகுந்தவேகமுள்ளது; புத் யுள்ளது. ஆதலால் உன்னால்முடியவில்லை. இதுபடுத்திருக்கையி கால்களை இந்தஎலி தின்றுவிடட்டும். பிறகு கால்கடிக்கப்பட்ட இதை புலி பிடித்துக்கொள்ளட்டும். அதன்பிறகு எல்லோரும் மனமகிழ் துதின்போம்" என்றுசொல்லிற்று. நரிசொன்னவாறே எல்லாம் ஒ மனத்தோடுசெய்தன. எலியினால் கால்கள் தின்னப்பட்ட அந்தமானை அப்போதே புலி கொன்றது. பூமியில் அசைவற்றுக்கிடந்தமானின் தேகத்தைக்கண்டவுடன் நரி, "நீங்கள் ஸ்நானம்செய்துவாருங்கள் உங்களுக்கு ஸுகமுண்டு. இதை நான் காத்துக்கொண்டிருக் றேன்" என்றுசொன்னதன்மேல், அவையெல்லாம் அங்கிருந்து ஆ றுக்குச்சென்றன. அந்தநரி மிகுந்தசிந்தையுடன் அங்கேயேயிரு தது. பிறகு மஹாபலசாலியானபுலி முதலில்ஸ்நானஞ்செய்துவிட் வந்து சிந்தையினால்மனக்கலக்கமுற்றநரியைக்கண்டு, "மிகுந்தபுத் யுள்ளவனே! ஏன்வ்யஸனப்படுகிறாய்? நம்முள் நீதானே சிறந்தபுத் சாலி. இப்போது நாம் மாம்ஸத்தைப்புஜித்து விளையாடுவோம் என்றுசொல்லிற்று. நரி, "மஹாவீரனே! எலிசொன்னசொல்லை நான்சொல்லுகிறேன்; கேள். 'மிருகராஜாவானபுலியின்பலம்இழி வானது. இந்தமான் இப்போது என்னால்கொல்லப்பட்டது. பு என்புஜபலத்தை ஆதாரமாகக்கொண்டு இப்போது பசிதீர்த்துக்கொ ள்ளப்போகிறது' என்று எலிசொல்லிற்று. இவ்வாறு அதுவீரவ தஞ்செய்ததைக்கேட்டபின் நான் இந்தஉணவைவிரும்பவில்லை" என றுசொல்லிற்று. புலி, அதைக்கேட்டு, "அஃது இவ்வாறுசொல்லுகி தா? எனக்குச் சரியானகாலத்தில்தெரிவித்தாயே! நான் என்கைவல் மையைக்கொண்டே காட்டிலிருக்கும்மிருகங்களைக்கொன்று அவ றின்மாம்ஸங்களைப்புஜிக்கப்போகிறேன்" என்றுசொல்லிவிட்டுக்காட்

ந்துப்போயிற்று. அதுபோனஸமயத்தில் எலியும் வந்துசேர்ந்தது. அதுவந்ததைக்கண்டு நரி, "எலியே! உனக்குச்சுகமுண்டாகட்டும். ப்பிள்ளை, 'நான் மான்மாம்ஸத்தையுண்ணேன். இதுவிஷம்; எனக் துபிடிக்கவில்லை. எலியைப் பக்ஷிக்கப்போகிறேன். அப்படிச்செய்வ து, நீ அநுமதிகொடுக்கவேண்டும்' என்று என்னிடம் சொல் று" என்றது. நரியின்சொல்லைக்கேட்டு, எலி பயந்து வளைக்குள் போய்விட்டது. ராஜாவே! பிறகு அந்தச்செந்நாயும் ஸ்நானஞ் செய்து அங்கேவந்தது. அதுவந்ததைப்பார்த்து அப்போது நரி, "புலி உன்மீது கோபித்துக்கொண்டிருக்கிறது. உனக்கு நன்மை உண்டாகாது. அது தன்மனைவியுடன் இவ்விடம் வரப்போகிறது. மேலே செய்யவேண்டியதைச் செய்துகொள்" என்றுசொல்லிற்று. மாம்ஸம்புஜிக்கவந்த அந்தச்செந்நாய் அந்தநரியினால் இவ்வாறு அறி விக்கப்பட்டவுடன் உடம்பைச்சுருக்கிக்கொண்டு ஓடிவிட்டது. அப் போது கீரிப்பிள்ளையும் வந்தது. மஹாராஜாவே! வனத்தில் நரி அந்தக்கீரிப்பிள்ளையைநோக்கி, "என்புஜபலத்தைக்கொண்டு என் னால்வெல்லப்பட்ட அவர்களெல்லாம் வேறிடங்களுக்குச் சென்றனர். முன் எனக்குக் கைச்சண்டையைக்கொடுத்தபிறகு வேண்டியவரை யில் மாம்ஸத்தைப்புஜிக்கலாம்" என்றுசொல்லிற்று. "மிருகராஜாவா கிய புலியும் செந்நாயும் புத்திமானான எலியுமாகிய இந்தவீரர்களை நீஜயி த்ததனால் நீ அவர்களினும் மேலானவீரன். உன்னோடு யுத்தஞ்செய்ய என்னால்முடியாது" என்றுசொல்லி அதுவும் போய்விட்டது. நல்ல ஆலோசனையின் நிச்சயத்தினால் நரி மனமகிழ்ச்சியுடன் தான் தனி யாய் அந்தமாம்ஸத்தைச் சாப்பிட்டது. இவ்வாறு செய்துகொண் டிருக்கும் அரசன் எப்போதும் ஸுகமாக விருத்தியாவான். பய முள்ளவர்களைப் பயத்தைக்காட்டிக் கலைக்கவேண்டும். சூரனைக் கும் பிடுவதனால் மாற்றவேண்டும். பொருளாசையுள்ளவனையும் ஒத்தபல முள்ளவனாயிருப்பவனையும் பொருள்கொடுப்பதனாலும் குறைந்தவ னைப் பராக்கிரமத்தினாலும் ஒதுக்கவேண்டும். ராஜாவே! இந்தவிஷ யம் உமக்குச்சொல்லியாயிற்று. அவ்வாறே மற்றொன்றும் சொல்லு கிறேன்; கேளும். புத்திரனாயினும் மித்திரனாயினும் ஸஹோதரனாயி னும் தந்தையாயினும் ஆசாரியனாயினும் பகைமையிலிருப்பார்களா யின் நன்மையைவிரும்புகிறவனால், (அவர்கள்) கொல்லப்படவேண் டியவர்களாயிருக்கிறார்கள். காப்பாற்றுவதாக ஸத்தியஞ்செய்தாவது பொருள்கொடுத்தாவது விஷம்அல்லது வஞ்சகத்தினாலாவது கொ ன்றுவிடவேண்டும். எவ்வகையினும் விடக்கூடாது. இருவரும் ஸமபி

பதில் ஸந்தேகமுள்ளவராயின் அவர்களுள் ஜாக்கிரதையுள்ளவ ஜயிப்பான். காரியாகாரியம்தெரியாமல் கர்வத்தோடு துர்மார்க்க தில் போனவன் குருவாயிருப்பினும் அவனைத் தண்டிப்பது நியா மாகும். கோபமுற்றவனாயிருந்தாலும் கோபிக்காதவன்போல் கா பித்துக்கொண்டு புன்னகையுடன் ஸம்பாஷணைசெய்துகொண்டிரு வேண்டும். இவனுக்குக் கோபமிருப்பதை யாரும் எவ்வகையினு அறியாமலிருக்கவேண்டும். கோபமுள்ளவன் ஒருபொழுதும் எ ரியை இகழ்ந்துபேசத்தகாது. பாரதரே! போகும்போதும் அடி கும்போதும் இன்சொல்லையேசொல்லவேண்டும். அடித்தபிறகும் வ் ஸனப்படுகிறவன்போலவும் அழுகிறவன்போலவும் இன்சொல்லை சொல்லவேண்டும். எதிரியைக்கூட, சாமத்தினாலும் அறம்பொரு களைப்பற்றிய ஒழுக்கங்களாலும் நம்பவைக்கவேண்டும். வழிதப் யிருந்த அந்தஎதிரியைப் பிறகு சமயம்நேர்ந்தபோது அடித்துவி வும் வேண்டும். பெருங்குற்றம்செய்தவனும் தர்மத்தைக்கைவிடா லிருந்தால் அவனுடைய அந்தப்பெருங்குற்றமும் இருண்டமேக களினால் குன்று மறைக்கப்படுவதுபோல் மறைக்கப்படுகின்ற கொல்லத்தகுந்தவனுடைய வீட்டில் தீவைக்கவேண்டும். பொருள் லாதவர்களையும் நாஸ்திகர்களையும் கள்ளர்களையும் விஷங்கொடுக்கு வேலையில் நியமிக்கவேண்டும். எதிர்சென்று ஆஸனங்கொடுப்பதுமு லிய உபசாரங்களாலும் சிறந்த வெகுமதிகொடுப்பதனாலும் மிகவ நம்பினவனைக் கூரானபற்களையுடைய பாம்புமுதலியவை தலைவணங் க்கடிப்பதுபோல் கொன்றுவிடவேண்டும். தன்னிடம் சங்கையுற்ற சங்கையில்லாதவர்முதலிய யாரைப்பற்றியும் தான் சங்கையுற்றவனு வே இருத்தல்வேண்டும். தான்சங்கைப்படாமல் நம்பினவனாலுண் டாகும்பயம் வேரையும்அறுத்துவிடும். தன்னைநம்பாதவனிடம் தா நம்பிக்கைவைக்கலாகாது. நம்பினவனிடத்தும் அதிகநம்பிக்கை கத்தகாது. நம்புவதனால்உண்டாகும்பயம் வேர்களையும் அறுத் விடும். தன்தேசத்திலும் அன்னியதேசத்திலும் செவ்வையாகப் க்ஷிக்கப்பட்ட சாரனை நியமிக்கவேண்டும். *பாஷண்டர்களையும் ரி கள்முதலானவர்களையும் அயல்தேசங்களில் தூதர்களாகநியமிக்க ண்டும். தோட்டங்களிலும் பௌத்தாலயங்களிலும் தேவாலயங்க லும் பர்ணசாலைகளிலும் வீதிகளிலும் †புண்ணியதீர்த்தங்களெல்

* பாஷண்டர் = நாஸ்திகர்.

† புண்ணியதீர்த்தம்: க. மந்திரி, உ. புரோஹிதன், ந. யுவராஜன், ஸேனாபதி, ரு. த்வாரபாலகன், சு. அந்தப்புராதிகாரி, எ. சிறைச்சாலையதிகா

முன் நிற்கக்கண்டான். உடனே, அவ்வரசன் மன்மதாக்கினியினால் கெ திப்புற்ற மனமுள்ளவனாகி, எழுத்துக்கள் தெளிவில்லாத சொல்ல னால் கறுத்தகண்களையுடைய அவளை அழைத்துப்பேசினான். 'கறுத் கண்களையுடையவளே! நல்லது. பெண்ணரசியே! மதனனால் வருத்த பட்டு உன்மீதுபற்றுள்ள என்னை நீ அடைவாயாக; என்னுயிர் என்னை விட்டுவிடுகின்றது. விசாலமானகண்களையுடையவளே! தாமரைமல ரின் உட்காய்போன்ற நிறமுள்ளவளே! உன்னைப்பற்றி இந்தமன்மதன கூரம்புகளினால் என்னை ஓயாமல் துளைக்கிறான். அழகியவளே! சிறந் முகமுள்ளவளே! இவ்வாறாகக் கேள்வியில்லாத இடத்தில் மன்ம னென்னும் பெரியஸர்ப்பத்தினால் கடிக்கப்பட்ட என்னைப் பருத்ததுட விசாலமுமான நிதம்பத்தையுடைய நீ அடைவாயாக. கின்னர கீத போலப் பேசுகிறவளே! என்னுயிர் உன்ஸ்வாதீனம். முழுதும் கு றமற்ற அழகான அங்கமுடையவளே! பதுமத்திற்கும் சந்திரனு கும் ஒப்பான முகமுள்ளவளே அச்சமுள்ளவளே! உன்னைவிட் நான் பிழைத்திருக்கமுடியாதவன். தாமரையிதழ்போன்ற கண்கள் யுடையவளே! இந்த மன்மதன் என்னைத்துளைக்கிறான். விசாலம னகண்களையுடையவளே! பெண்ணரசியே! ஆதலால், என் விஷய தில் தயைசெய். கறுத்தகண்களையுடையவளே! பற்றுள்ள என்னை விடத்தகாது. பெண்ணரசியே! நீ அன்புவைத்து என்னைக்காப்பா றுதற்குரியவளாகிறாய். உன்னைப்பார்த்ததனாலே நேசம்வைத்த என மனம் மிகக்கலங்குகிறது. அழகியே! உன்னைப்பார்த்தபின் ம றொருத்தியைப் பார்க்க எனக்கு விருப்பமில்லை. பெண்ணரசியே தயைசெய். நான் உன்ஸ்வாதீனம். பற்றுள்ள என்மேல் அன்புவை சிறந்த நிதம்பமுடையவளே! விசாலமானகண்களையுடையவளே! உ னைப்பார்த்தவுடன் மன்மதன் உள்ளே மறைந்து அம்புகளினால் அ த்துவிட்டான். தாமரைக்கண்ணியே! மதனனென்னும் தீயினால் என குண்டான தாபத்தை அன்புவைப்பதென்னும் பெயருள்ள ஜலத் னால்தணிக்கக்கடவாய். இனியவளே! பெண்ணரசியே! உன்னைக்கண்ட னாலுண்டாகித் தாங்கமுடியாத அம்புகளினால் அடிப்பவனும் ஜயிக முடியாதவனும் உக்ரங்களாகிய அம்பும்வில்லுமுடையவனுமான ம னை நீ உன்னைக்கொடுப்பதனால் சமனஞ்செய்வாயாக. மங்கையரி சிறந்தவளே! காந்தர்வமென்னும்விவாகத்தினால் என்னைச்சேர். வாழை மரம்போன்ற துடைகளுடையவளே! விவாகங்களுள் காந்தர்வவிவாக சிறந்ததென்று சொல்லப்படுகின்றது' என்றான்.

தபதி, 'ராஜாவே! நான் தந்தைக்கடங்கிய கன்னிகை. என் ஷயத்தில் நான் ஸ்வதந்திரையல்லள். என்னிடத்தில் உனக்கு ருப்பமிருந்தால் என் தந்தையைக் கேள். வேந்தனே! நீ என்னைப்பார் தமாத்திரத்தில் உன்னுயிர் என்னால் எவ்வாறு அபகரிக்கப்பட்டதோ வ்வாறாகவும் அதற்கதிகமாகவும் நீ என்னுயிரை அபகரித்துவிட் டாய். ராஜஶ்ரேஷ்டனே! ஆனால், என்தேகத்துக்கு நான் அதிகாரி ன்று. அதனால், உன்னிடம் வரவில்லை. பெண்கள் ஸ்வதந்திரைகளல் ர். எல்லா உலகங்களிலும் கியாதிபெற்ற குலமுடையவனும் அடுத்த ர்களிடம் அன்புள்ளவனுமாகிய பிரபுவை எந்தக் கன்னிகை கணவ கவிரும்பாள்? ஆதலால், இவ்விதமானகாலத்தில் என் தந்தையான திதியரை நமஸ்காரத்தினாலும் தவத்தினாலும் விரதத்தினாலும் ஆரா த்து வேண்டிக்கொள். பகைவரைமாய்ப்பவனே! ராஜாவே! அவர் ன்னை உனக்குக் கொடுக்கவிரும்புவாராயின், நான் உனக்கு எப் பாதும் வசப்பட்டிருப்பவளாக இப்போதே ஆகிவிடுவேன். க்ஷத்திரிய ரேஷ்டனே! நான் தபதியென்று பெயருள்ளவள். உலகத்துக்கெல்லாம் பமாகிய இந்த ஸூர்யனுடைய பெண்ணான ஸாவித்திரிக்கு இளை வள்' என்றாள்.

---

## நூற்றெண்பத்தோன்பதாவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம் (தொடர்ச்சி.)

(மறுபடி தபதி மறைந்ததும், மயக்கங்கொண்ட ஸம்வரணனிடம் மந்திரிவந்து தேறுதல்செய்ததும், ராஜா ஸூர்யனை உபாஸிக்குங்காலத்தில் வஸிஷ் டர் வந்ததும், வஸிஷ்டர் ஸூர்யனிடஞ்சென்று ஸூர்யனைத்துதிக்க அதனால் ஸந்தோஷமடைந்த ஸூர்யன் ஸம்வரணனுக்காகத் தன்பெண்ணை வஸிஷ்டரிடம் கொடுத்ததும், அந்தமலை யிலேயே தபதியும் ஸம்வரணனும் விவாகஞ் செய்துகொண்டு அங்கேயே கிரீடைசெய்து கொண்டிருக்கையில் அவன் ராஜ்யத்தில் துவாதசவருஷக்ஷாமம் வந்ததும், அதனை வஸிஷ்டர் நிவிர்த்தி செய்ததும்.)

சிறந்தவளான தபதி இவ்விதம் சொன்னபிறகு விரைவாக மேலுலகம்சென்றாள். அரசன் மனநோயுற்றவனாக, 'தபதி, தபதி' என்றே புலம்பினான். அவ்வரசன் பலமுறை தடுக்கிவிழுந்தான். மறுபடியும்

எழுந்து ஓடினன். ஓடியும் தபதியைக்காணுமலே அவ்வரசன் அ
தப்பூமியிலேயே திரும்பியும் விழுந்தான். படையுடனும் வேலைக்கா
களுடனும்கூட ராஜாவைத்தேடிவந்த அமைச்சன், உத்ஸவகாலத்தி
நாட்டப்பட்ட இந்திரத்வஜம் வீழ்ந்ததுபோலப் பெரியவனத்தில் தன
யில் வீழ்ந்திருக்கும் அரசர்களிற் சிறந்த அந்த ஸம்வரணனைக்கக
டான். அப்படிப்பட்ட சிறந்தவில்லாளி யாவராலும் விடப்பட்டு
தரையில் விழுந்திருப்பதைக்கண்டு அவனுடைய அந்த மந்திரி தீ
னாற் கொளுத்தப்பட்டவன்போல் ஆனன். அவன் விரைவாக அருகி
வந்து சினேகத்தினல் பரபரப்புற்றுப் பெண்மீது மோகங்கொண்
மூர்ச்சித்து விழுந்திருந்த அந்த அரசர்க்கரசனுன ஸம்வரணராஜனை
புத்திரனைப் பிதா எடுப்பதுபோல் பூமியிலிருந்து தூக்கியெடுத்தான்
புத்தியிலும் பிராயத்திலும் புகழிலும் நீதிசாஸ்திரஜ்ஞானப்பயிற்
யிலும் முதிர்ந்தவனுகிய அந்தமந்திரி அந்தராஜாவைத் தூக்கியெடுத்
பின் துயரம் நீங்கினவனுனன். எழுந்திருந்த அவ்வரசனைநோக்கி
இனிமையும் நன்மையுமுள்ள சொல்லினல், 'மானிடப்புலியே! பய
படாதே. குற்றமற்றவனே! உனக்கு ஸுகமுண்டாகும்' என்றுசொ
னன். போரில் சத்துருக்களைவீழ்த்துபவனுன அவ்வரசன் தான் ப
யினலும் தாகத்தினலும்களைத்துத் தரையில்வீழ்ந்ததாக ஊகித்தான்
தாமரைமலரின் வாசனையோடுகூடிய குளிர்ந்த ஜலத்தினல் அவ்வரச
தலையை நனைத்துக் கிரீடத்தைத் திருத்திவைத்தான். பிறகு, பலசா
யான அவ்வரசன் மூர்ச்சைதெளிந்து அவ்வமைச்சன் ஒருவனைத்தவி
மற்றச்சேனையெல்லாவற்றையும் அனுப்பிவிட்டான். அப்போது, அ
வரசனுடைய கட்டளையினல் பெருஞ்சேனை புறப்பட்டது. அவ்வரச
மாத்திரம் மறுபடியும் அம்மலைச்சரிவில் உட்கார்ந்தான். பிறகு, அவ
அந்தச்சிறந்தமலையில் ஸ்நானமுதலியவற்றினல் பரிசுத்தனுகி ஸூ
யனை ஆராதிக்கக் கருதிக் கைகூப்பிக்கொண்டு மேனேக்கிய முக
முடன் பூமியில்நின்ருன். அப்போது ஸம்வரணராஜன் காமக்குரே
தங்களாகிய சத்துருக்களையழித்த புரோகிதரான வஸிஷ்டரென்னு
ரிஷிஸ்ரேஷ்டரை மனத்தில் தியானித்தான். அவ்வாறு அவ்வரச
இரவும் பகலும் ஓரிடத்தில் நின்றுகொண்டிருந்தபோது பன்னிரன்
டாவது தினத்தில் பிரம்மரிஷியான வஸிஷ்டர்வந்தார். ஆத்மஜ்ஞான
முள்ளவரும் ரிஷிஸ்ரேஷ்டரும் தர்மாத்மாவுமாகிய வஸிஷ்டமாமுன
வர் அவ்வாறு தவத்தில் மனம்வைத்திருந்த அவ்வரசனைக் கண்ட
வுடன், தபதியினல் அவன் மனம் அபகரிக்கப்பட்டிருப்பதைத் திவ்ய
ஜ்ஞானத்தினலறிந்து, அவன் விரும்பினதை நிறைவேற்றக்கருதி

..வனிடம் பேசினர். ஸூர்யனுக்கொப்பான தேஜஸுள்ள அந்த வஸிஷ்டபகவான் அவ்வரசன்பார்த்திருக்கையிலேயே ஆயிரம் கிரண ங்களுள்ள ஆதித்யனைக்காண்பதற்கு மேலேசென்றார்.

தபோதனரான அந்தப் பிரமரிஷி லக்ஷம் யோசனைதூரம் ஒரு ..டியில் சென்று அங்கே பக்தியுடன் கை கூப்பிநின்று, 'நான் வஸி ஷ்டன்' என்று தம்மைத்தெரிவித்தார். சிறந்தஒளியுள்ள ஸூர்யன் அம்முனிஸ்ரேஷ்டரைநோக்கி, 'மஹரிஷியே! உமக்கு நல்வரவு; நீர் விரும்பினதைச் சொல்லும். மஹானுபாவரே! சிறந்தவாக்குள்ளவரே! என்னிடத்தில் எதைவிரும்புகிறீரோ அந்த உமது அபீஷ்டம் மிக்கதுர் லபமாயிருப்பினும் அதனை உமக்கு நான்கொடுப்பேன்' என்றுசொன் னன். ஸூர்யனால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்த வஸிஷ்டமா முனிவர், பிரகாசமான கிரணங்களோடுகூடிய ஸூர்யனை நமஸ்கரித்து வக்கினால் துதிசெய்துகொண்டு எவன் ஒவ்வொருநாளும் ஒருநிமிஷத் திற்கு முந்நூற்றறுபத்துநான்கு *யோஜனைதூரம் குதிரைகளால் செல் கிறானோ அந்தச் சூரியன்பக்கத்தில் நின்றுகொண்டு பின்வருமாறு சொல்லத்தொடங்கினர். 'ஜனனமில்லாதவரும் மூன்றுலோகங்களையும் சந்தஞ்செய்கிறவரும் பிராணிகளுக்கு ஆத்மாவும் கிரகங்களுக்கு அதி பதியும் வருஷிப்பவரும் சிருஷ்டி பிரளயங்களுக்கிருப்பிடமும் உத் தமமான மஹாதயாளுவுமாகிய ஸூர்யனை நமஸ்கரிக்கிறேன். ஞானத் திற்குநிதியும் எல்லாப்பிராணிகளுக்கும் அந்தராத்மாவும் உலகத்திற் கு பெருவிளக்கும் உலகங்களின் நன்மையைவிரும்புகிறவரும் தாமே யுண்டானவரும் ஜ்வலிக்கின்ற ஆயிரம்கிரணங்களோடு கூடியவரும் தேவஸ்ரேஷ்டரும் விரிவான ஒளியுள்ளவருமாகிய † விவஸ்வானைநமஸ் கரிக்கிறேன். உலகங்களுக்கொருகண்ணும் லோகங்களின் பிறப்புக் கு இருப்புக்கும் இறப்புக்கும் காரணமும் ‡ மூன்று வேதரூபியும் § முக்குணங்களாலாகிய சரீரங்களைத்தரிப்பவரும் பிரம்மவிஷ்ணுமஹே ச்வரஸ்வரூபியுமாகிய $ ஸவிதாவை நமஸ்கரிக்கிறேன்' என்று துதி செய்தார். ஸூர்யபகவான், 'சிறந்ததவமுள்ளவரே! உம்மால் துதிக் கப்பட்ட நான் இப்போது வரம்கொடுப்பவனாக இருக்கிறேன். உம் மால்சொல்லப்பட்ட துதி என்னிடம் பக்தியுள்ளவர்கள் ஜபஞ்செய் வதற்குரியது. நான் அவர்களுக்கும் வரம்கொடுப்பேன்' என்று சொல்ல, வஸிஷ்டர், 'ஸூர்யபகவானே! ஸாவித்ரிக்கு இளையவளான இந்

* எட்டு மைல். † ஸூர்யன். ‡ ரிக், யஜுஸ், ஸாமம்.

§ ஸத்வரஜஸ்தமோகுணங்கள். $ ஸூர்யன்.

தத்தபதியென்னும் உமதுகுமாரி இருக்கிருளே, இவளை ஸம்வரண னுக்காக உம்மிடம்வரிக்கிறேன். அவ்வரசன் பெரியகீர்த்தியுள்ளவன்; தர்மார்த்தங்களை அறிந்தவன்; உயர்ந்தபுத்தியுள்ளவன். ஆகாயத்தில் ஸஞ்சரிப்பவரே! உமதுபெண்ணுக்கு ஸம்வரணன் தகுதியான கண வன்' என்றார். இவ்வாறு வஸிஷ்டரால் சொல்லப்பட்ட அந்தஸூர்ய பகவான், அந்தப்பிராம்மணர் சொன்னதை அங்கீகரித்துக் கொடுக்கலா மென்றே நிச்சயஞ்செய்துகொண்டு, 'ரிஷியே! அரசர்களில் ஸம்வரணன் சிறந்தவன். நீர் ரிஷிகளிற் சிறந்தவர். தபதி பெண்களிற் சிறந்தவள் கொடுப்பதைத்தவிர வேறென்ன இருக்கிறது?' என்று மறுமொழி சொன்னான். பிறகு, ஶ்லாக்கியமான எல்லா அங்கங்களையுமுடைய தபதியைத் * தபனன் தானாகவே ஸம்வரணனுக்காக மஹாத்மாவான வஸிஷ்டரிடம் கொடுத்தான்.

வஸிஷ்டமஹாரிஷி அந்தத் தபதியென்னும் கன்னிகையைப்பெ றுக்கொண்டபிறகு விடைபெற்றுக்கொண்டு அப்போதே புகழ்பெற் கௌரவஶ்ரேஷ்டனை ஸம்வரணனிருக்குமிடத்திற்குத் திரும்பி வந்தனர். அந்தத் தபதியினிடம் சென்றமனத்துடன் மன்மதாவேச கொண்டிருந்த அவ்வரசன், அழகிய நகையுள்ள அந்தத்தபதியென் னும் தேவகன்னிகை வஸிஷ்டருடன்கூட வரக்கண்டு மிக்க மகிழ்ச் யுற்றவனாக விளங்கினான். அழகிய புருவங்களுள்ள அந்தத்தபதி ஆகாசத்திலிருந்து வரும்போது மேகத்திலிருந்துவிழுந்த மின்னலை போல் ஒளியினால் திசைகளை விளக்கிக்கொண்டு அதிகமாகப் பிரக சித்தாள். அவ்வரசனுக்குக் கஷ்டத்துடன் பன்னிரண்டுஇரவு ஸம தியிற் சென்றபிறகு பரிசுத்தாத்மாவான ரிஷியாகிய வஸிஷ்டபகவா வந்தார். ஸம்வரணன், வரங்கொடுப்பவரும் கிரகங்களுக்கு அதிபதியு ஈஶ்வரருமாகிய ஸூர்யபகவானைத் தவத்தினால் ஆராதனஞ்செய் பிறகு வஸிஷ்டருடைய மஹிமையினாலே தான் பாரியையையடை தான். அதன் பிறகு, தேவகந்தர்வர்களால் ஆசிரயிக்கப்பட்ட அந்த சிறந்த பருவதத்தில் அவ்வரசன் சாஸ்திரப்படி தபதியைப் பாணி கிரஹணஞ் செய்தான். அந்த ராஜரிஷி வஸிஷ்டரால் அனுமதி கொடு கப்பெற்று அந்தப் பர்வதத்திலேயே மனைவியுடன் கூடி விளை டக்கருதினான். அப்போது அரசன் அங்கிருந்துகொண்டு நகரத்தையு தேசத்தையும் காடுகளையும் தோட்டங்களையும் ஆளும்படி அந்த அமை ச்சனையே நியமித்தான். ராஜாவினிடம் விடைபெற்றுக்கொண்டு வ

* சூரியன்

ர் உடனே சென்றார். பிறகு, அவ்வரசன் அம்மலையில் தேவதை
ப்போல் விளையாடினான். அது முதல் பன்னிரண்டு வருஷகாலம்
சன் அந்த மனைவியுடன்கூடவே அம்மலையிலுள்ள காடுகளிலும்
ரகங்களிலும் ரமித்தான். சிறந்த ஸாதுவே! பாரதனே! அவ்வர
டைய அந்த நகரத்திலும் தேசத்திலும் பன்னிரண்டு வருஷ
ம் இந்திரன் மழை பொழியவில்லை. பகைவரையடக்குகிறவனே!
கே அந்த *அனாவிருஷ்டி நேர்ந்தபோது ஸ்தாவரங்களும் ஜங்கமங்
மாகிய எல்லாப் பிரஜைகளும் நாசமடைந்தன. அப்படிப்பட்ட
க கொடியகாலம் நேர்ந்தபோது பூமியில் பனியும்விழவில்லை. அத
, பயிர்கள் முளைக்கவில்லை. அப்போது பசியினபயத்தினால் பீடிக்
ட்ட ஜனங்கள் மனங்கலங்கி வீடுகளைவிட்டுத் திசைகளிலும் மூலை
லும் திரிந்தனர். பிறகு, அந்த நகரத்திலும் தேசத்திலும் பசியி
வருந்தின ஜனங்கள் மனைவியரிடத்தும் அபிமானத்தை விட்டு
ரகடந்து ஒருவரையொருவர் கொன்றனர். அவ்வாறு பசியினால்
ருந்தினவரும் மகிழ்வற்றவரும் பிணங்கள் போன்றவருமான மனி
ர்களினால் அந்நகரம் பிரேதங்களினால் சூழப்பட்ட யமபுரம்போ
யிற்று. பிறகு, அவ்வாறிருந்த அந்த நகரத்தைக்கண்டு தர்மாத்மா
ரிஷிஶ்ரேஷ்டருமாகிய அந்த வஸிஷ்டபகவானே அரசனிடம்
வந்தனர். அர்ச்சுனா! பன்னிரண்டாவதுவருஷம் கடந்தபின், அந்த
ஶ்ரேஷ்டனைத் தபதியுடன்கூட அந்தநகரத்துக்கு அழைத்துவந்
ர். உடனே இந்திரன் அங்கே முன்போலவே நல்லமழைபெய்தான்.
க ராஜஶ்ரேஷ்டன் மறுபடியும் நகரத்துள் பிரவேசித்தபோது பிர
ாகிய இந்திரன் முன்போலப் பயிர்களை விருத்திசெய்வதற்காக நல்
மழை பொழிந்தான். அதனால் பரிசுத்தமான மனமுள்ள அந்த ராஜ
ஶ்ரேஷ்டனால் பரிபாலனஞ் செய்யப்பட்ட அந்தநகரத்துடன் தேசமும்
மகிழ்ந்து அபிவிருத்தியாயிற்று. பிறகு, ஸம்வரணராஜன் மறுபடி
ப் தன்பத்னியாகிய தபதியுடன்சேர்ந்து இந்திராணியுடன்சேர்ந்த
ந்திரன்போல் பன்னிரண்டுவருஷம் யாகஞ்செய்தான். பார்த்தனே!
து கூடஸ்தையான தபதியென்னும் மஹா பாக்கியவதியான
ர்யபுத்திரி இவ்வாறிருந்தாள். அவளால் நீ தாபத்யனென்றுசொல்
ப்படுகிறாய். பராக்கிரமசாலிகளிற் சிறந்தவனே! அர்ச்சுனா! அந்தத்
பதியினிடம் ஸம்வரணராஜன் குருவென்பவனைப்பெற்றான். ஆதலால்,
ாபத்யனாகிறாய்' என்றான்.

---

* மழையில்லாமை.

## நூற்றெழுபத்தொண்ணூறுவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம். (தொடர்ச்சி.)



(கந்தர்வன் வஸிஷ்டருடைய மஹாத்மியத்தைச்சொல்வது.)

பரதஸ்ரேஷ்டரான ஜனமேஜயரே! அந்த அர்ச்சுனன் கந்தர்வ சொன்ன அந்தவசனத்தைக்கேட்டு அப்போதே சிறந்த பக்தியுட பூர்ணசந்திரன்போலப் பிரகாசித்தான். சிறந்தவில்லாளியான அ சுனன் வஸிஷ்டருடைய தவவன்மையைப்பற்றி மிக்க வியப்படைந் கந்தர்வனைப்பார்த்து, 'கந்தர்வராஜாவே! எவர் எங்களுடைய மு ன்னோர்களுக்குப் புரோஹிதராயிருந்தாரோ அந்தமஹரிஷிக்கு வஸி டரென்ற பெயர் உன்னால்சொல்லப்பட்டது. அஃது எவ்வாறு வ தென்பதையும் அந்தப் பகவானான ரிஷி எப்படிப்பட்டவரென்ப யும் நான் கேட்கவிரும்புகிறேன். அதனை எனக்குச்சொல்' என்றுகே டான். கந்தர்வன், '* வஸிஷ்டர் பிரம்மாவுக்கு †மானஸபுத்திரர். அ ததிக்குப் பர்த்தாவாகியவர். தேவர்களாலும் வெல்லமுடியாத காம குரோதங்களிரண்டும் அவருடைய தவத்தினால் ஜயிக்கப்பட்டு அவரு குக் ‡ கால்பிடித்துக்கொண்டிருந்தன. இந்திரியங்களைவசப்படுத்தி தனால் வஸிஷ்டரென்றுசொல்லப்படுகிறார். மனிதர்களால் வெல் கூடாத காமக்குரோதங்கள் அவரால் எவ்வாறு ஜயிக்கப்பட்டனவோ அவ்வாறே எதிரிகளும் ஜயிக்கப்பட்டனர். லோகங்களும் ஜயிக் பட்டன. லோகங்களுக்குப்போகிற வழிகளும் திசைகளும் ஜயிக் பட்டன. சிறந்த ஞானமுள்ள வஸிஷ்டர், விசுவாமித்திரர் செய பிழையினால் உண்டான மிகுந்தகோபத்தை யடக்கிக்கொண்டு கு வம்சத்தவரை அழிக்காமலிருந்தார். புத்திரசோகத்தினால் கொ புற்றபோது வல்லமையுள்ளவராயிருந்தும் வல்லமை யில்லாதவ போல் விசுவாமித்திரரை அழிக்கத்தக்க கொடியகருமம் செய்யாம ருந்தார். இறந்துபோன புத்திரர்களையும் யமன் வீட்டிலிருந்து தி ப்பிக் கொண்டுவர வல்லமையுள்ளவராயிருந்தும் கருங்கடல் கர யை மீறாமலிருப்பதுபோலத் தெய்வத்தைஅதிக்ரமிக்காமலிருந்த

---

* காமக்குரோதங்களை ஜயித்து இந்திரியங்களை வசப்படுத்தியவர்.

† வருணனுடைய வீரியத்திலிருந்து பிரம்மாவினுடைய அனுக்ரகத்தில ஜனித்தவர்.

‡ உருவத்தோடு அவர்கால்பிடிக்கும்வேலைக்காரர்களாக இருந்தனபோலு

ரிதர்களிற்சிறந்தவர்களாகிய இக்ஷ்வாகு வம்சத்தவர்கள், மனத்தை த்தவராகிய அம்மஹாத்மாவைச்சேர்ந்தபிறகுதான் இப்புவனியை டந்தனர். கௌரவபுத்திரனே! அவ்வரசர்கள் ரிஷிஸ்ரேஷ்டராகிய தவஸிஷ்டரைப் புரோகிதராகப் பெற்று அனேகயாகங்கள் செய் ர். பாண்டவஸ்ரேஷ்டனே! அந்தப்பிரமரிஷி அந்தராஜஸ்ரேஷ்ட லாருக்கும் தேவர்களுக்கு ப்ருஹஸ்பதிபோல் யாகங்களைச் செய் தார். ஆதலால், தர்மத்தையே பிரதானமாக உள்ளத்திற்கருதினவ வேதமும் தர்மசாஸ்திரமுந் தெரிந்தவரும் மனத்திற்கினியவரும் ணவானுமாகிய ஒருபிராமணபுரோகிதரை (நீங்கள்) தேடவேண்டும். த்தனே! பூமியைஜயிக்க விரும்புகின்ற நல்லகுலத்திற்பிறந்த க்ஷத் தியன் ராஜ்யத்தின் அபிவிருத்திக்காக முதலில் புரோகிதனை ஏற்படு க்கொள்ளவேண்டும். பூமியை ஜயிக்கவிரும்புகின்ற அரசன் பிராம னை முன்னிட்டுக்கொள்ளவேண்டும். ஆதலால், குணவானும் ஜிதேந் தியரும் வித்துவானும் அறம்பொரு ளின்பங்களின் உண்மையை அறிந்தவருமாகிய ஒரு பிராம்மணபுரோஹிதர் உங்களுக்கிருக்க வேண்டும்' என்றான்.

---

## நூற்றெழுபத்தோராவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம் (தொடர்ச்சி.)

---

(வஸிஷ்ட உபாக்யானத்தில் விஸ்வாமித்திரர் வஸிஷ்டருடைய ஆச்ரமம் சென்றதும், வஸிஷ்டர் விசுவாமித்திரருக்கு ஆதித்யஞ்செய்ததும், விசுவாமித்திரர் வஸிஷ்டருடையபசுவையாசித்தும் கொடாததால் பசுவைப் பலாத்காரமாக அபகரித்ததும், கோபமடைந்த விசுவாமித்திரரைத் தோற்கச்செய்ததும், விசுவாமித்திரர் தவஞ்செய்து பிராம்மணரானதும்.)

அர்ச்சுனன், 'சிறந்த ஆசிரமத்தில் வாஸஞ்செய்துகொண்டிருந்த வஸிஷ்டவிசுவாமித்திரர்களுக்கு யாதுகாரணம்பற்றி விரோதம் உண் டாயிற்று? அதனை முழுதும் எங்களுக்குச்சொல்' என்று கேட்க, கந் தர்வன் சொல்லுகிறான்:—

'அர்ஜுனா! இந்தவஸிஷ்டருடையசரித்திரத்தை எல்லாலோக ங்களிலும் புராணமென்று சொல்லுகின்றனர். அதனை உள்ளபடி என்

ணிடத்தில்கேள். பரதஸ்ரேஷ்டனே! கான்யகுப்ஜதேசத்தில் குசிகரி
புத்திரரான காதியென்று உலகத்திற் கியாதிபெற்ற ஒருமஹாராஜ
இருந்தார். அந்தத்தர்மாத்மாவின் புத்திரராகிய விசுவாமித்திரரென்
பெயர்பெற்ற ராஜர் சேனைகளும் வாஹனங்களும் மிகுதியாகஅடைந்
பகைவரை யழிப்பவராயிருந்தார். அவர்சேனைகளுடன் மஹாவனத்தி
வேட்டையாடித்திரிந்தார். புருஷஸ்ரேஷ்டனே! அழகானமலைகளிலு
பாலைவனங்களிலும் மான்களையும் பன்றிகளையும் அடித்துச் சிரமத்
னால் களைப்புற்ற அவர் மானைத்தேடிக்கொண்டு தண்ணீரை விரும்
வஸிஷ்டருடைய ஆசிரமம் நோக்கிவந்தார். ஸ்ரேஷ்டர்களைப்பூஜிப்
வராகிய வஸிஷ்டமகரிஷி, புருஷஸ்ரேஷ்டரான அந்த விசுவாமித்திர
வந்ததைக்கண்டு அவரை மரியாதையுடன் அழைத்தார். பாரதனே
அர்க்கிய பாத்ய ஆசமனீயங்கள் கொடுத்து நல்வரவு சொல்லி வனத்
துள்ள அன்னத்தையுமளித்து அவரை அப்போதுஆதரித்தார். பிறகு
அந்தமஹாத்மாவான வஸிஷ்டருடைய காமதேனு, 'வேண்டியவற்றை
கொடு' என்று அவரால் கட்டளையிடப்பட்டவுடனே விரும்பினவற்றை
கறந்தது. அர்ச்சுனா! ஆவியோடுகூடிய பருவதம்போன்ற அன்னக்கு
வியல்களையும், மோர் ரஸம் துவையல் முதலியவற்றையும், பருப்புக
ளையும், தயிர்வாய்க்கால்களையும், நெய்நிரம்பின கிணறுகளையும், சர்
க்கரைப்பொங்கல்களையும், கரும்புகளையும், தேன்களையும், பொரிகளையு
* மைரேயம் என்னும் உயர்ந்தசாராயங்களையும், கிராமங்களிலும் காடு
களிலுமுள்ள ஓஷதிகளையும், பாலையும், ஆறுரஸங்களும்சேர்ந்து அமி
ர்தத்துக்கொப்பான சிறந்த † ரஸாயனத்தையும், உண்ணத்தக்கவை
குடிக்கத்தக்கவையான பலவகைப் பக்ஷணங்களையும், அமிர்தத்து
கொப்பான ‡ லேகியங்களையும், § சோஷ்யங்களையும், பலவகைகளான
உயர்ந்த விலைபெற்ற ரத்னங்களையும், ஆடைகளையும் மிகுதியாக
கொடுத்தது. அந்தராஜா மந்திரிகளோடும் சேனைகளோடும்கூட
ஒன்றும் குறைவில்லாத அந்த இனியவஸ்துக்களினால் பூஜைசெய்ய
பெற்று அப்போது மிகவும் திருப்தியடைந்தார்.

$ ஆறு அவயவங்கள் நீண்டதும், அழகான விலாப்புறங்களு
துடைகளுமுடையதும், ¶ ஐந்து இடங்கள் பருத்திருப்பதும், தவளை

---

* மிரையென்னும் தேசத்திலுண்டானது. † பலத்தைத்தரும் உணவு.

‡ நக்கிச்சாப்பிடத் தக்கவை. § உறிஞ்சிச் சாப்பிடத்தக்கவை.

$ தலை, கழுத்து, துடைகள், அலைதாடி, வால், முலை.

¶ நெற்றி, காது இரண்டு, கண் இரண்டு.

போன்ற கண்களையுடையதும், அழகிய உருவமுள்ளதும், பருத்த யுள்ளதும், நல்லலக்ஷணங்கள்பொருந்தியதும், அழகான வாலுள் ளம், முளைகள்போன்ற காதுகளுடையதும், அழகானகொம்புகளு யதும், மனத்திற்கினியதும், பருத்தும் நீண்டுமிருக்கும் தலையும் த்துமுடையதுமாயிருக்கிற அந்தத்தேனுவைக்கண்டு அந்தவிசுவா திரர் வியப்புற்றார். காதியின்புத்திரராகிய அந்த அரசர் அந்தநந் கிரியென்னும் பெயருள்ள பசுவைச்சிலாகித்து அப்போது அந்த வஸி ஷ்ட மஹரிஷியைப்பார்த்து மிகுந்த ஸந்தோஷத்துடன், 'பிராம்மண ே! பத்துக்கோடி பசுக்களையாவது அல்லது என்னுடைய ராஜ்யத் தையேயாவது பெற்றுக்கொண்டு நந்தினியை எனக்குக்கொடும். மஹா முனியே! ராஜ்யத்தைஅனுபவியும்' என்று சொன்னார். அதைக்கேட்டு வஸிஷ்டர், 'தேவதைகளுக்கும் அதிதிகளுக்கும் பிதிர்க்களுக்கும் எமைப் புரோஹிதராகவைத்து யாகஞ்செய்பவருக்குமாக இந்த நந் கிரியென்னும்பசு இருக்கிறது. குற்றமில்லாதவரே! ராஜ்யத்தைக் கொடுத்தாலும் இஃது உமக்குக்கொடுக்கத்தகாது' என்றார். விசுவா மித்திரர், 'பகவானே! இந்தப்பசு * ரத்னம், ரத்னத்தையெடுத்துக் கொள்பவன் அரசன். நான் க்ஷத்ரியன். நீர் தபஸையும் வேதாத்யயனத் தையும் கருவிகளாகவுடைய பிராம்மணர்; சாந்தர்களும் மனத்தை அடக்கினவர்களுமாகிய பிராம்மணர்களுக்குப் பராக்கிரமம் ஏது? பத் துக்கோடி பசுக்களை வாங்கிக்கொண்டு நான் விரும்பினதை நீர் கொடா விட்டால் நான் என்தர்மத்தைவிட்டுவிடேன். பசுவைப் பலாத்காரமாகக் கொண்டேபோவேன்' என்றார். வஸிஷ்டர், 'நீர் சேனையுடனிருப்பவர்; அரசர்; க்ஷத்ரியர்; கைவன்மையுள்ளவர். நீர் எவ்வாறு விரும்புகிறீரோ அவ்வாறு உடனே செய்யும்; சங்கைப்படவேண்டாம்' என்றார். அர்ச் சுந! வஸிஷ்டரால் இவ்வாறு சொல்லப்பட்ட விசுவாமித்திரர் ஹம் ஸத்திற்கும் சந்திரனுக்கும் ஒப்பானதேனுவைப் பலவந்தமாக இழுத் தார். பிறகு, உத்தம குணமுள்ளதான அந்த வஸிஷ்டருடையநந்தினி யென்னும் தேனு விசுவாமித்திரருடைய படைச்சேவகர்களால் பலாத் காரமாக இழுக்கப்பட்டுக் கசைகளாலும் தடிகளாலும் இங்குமங்கும் அடித்துத் துரத்தப்பட்டும், 'அம்மா' என்று கூவிக்கொண்டு பகவா னை வஸிஷ்டருக்கெதிரேவந்து தலைதூக்கிநின்றது. மிகுதியாக அடிக் கப்பட்டும் அந்த ஆசிரமத்தைவிட்டுச் செல்லவில்லை. அதைப்பார் த்தவஸிஷ்டர், 'பிரியமுள்ள நந்தினியே! அடிக்கடி கதறுகின்ற உன்

* உயர்ந்தபொருள்.

சப்தத்தைக் கேட்கிறேன். நீ விசுவாமித்திரரால் பலவந்தமாக இழுக்
படுகிறாய். அதற்கு என்னாற்செய்யக்கூடியதென்ன? நான் பொறுமை
யுள்ள பிராம்மணனல்லவா?' என்றுசொன்னார். பரதஶ்ரேஷ்டனே!
அர்ச்சுனா! அந்தநந்தினி அந்தச் சேனைகளின் பயத்தினாலும் விசு
மித்திரரிடமுள்ள பயத்தினாலும் வருத்தமுள்ளதாகி வஸிஷ்டனை
சரணமடைந்து, 'பகவானே! கொடியவர்களான விசுவாமித்திருடை
சேனையாகிய ஜனங்களினால் கசைகளாலும் தடிகளாலும் அடிக்கப்பட
அநாதையைப்போலிருக்கிறேன். என்னை ஏன் கவனிக்காமலிருக்கிறீ
என்று சொல்லிற்று.

அர்ச்சுனா! இவ்வாறு அந்தத்தேனு பீடிக்கப்பட்டபோது உறு
யான நியமமுள்ள வஸிஷ்டமாமுனிவர் கலங்கவுமில்லை. தம் நிலை
விட்டுப் பெயரவுமில்லை. அப்போது வஸிஷ்டர், 'க்ஷத்ரியர்களுக்கு
பராக்கிரமம் வன்மை; பிராம்மணர்களுக்குப் பொறுமை வன்மை
பொறுமை என்னை யடைந்திருக்கிறது. ஆதலால், உனக்கிஷ்டமிரு
தால் செல்' என்றுசொல்ல, நந்தினி, 'பகவானே! நான் உம்மால்விட
பட்டேனா என்ன? ஏன் இவ்வாறுபேசுகிறீர்? பிராம்மணரே! நா
உம்மால் விடப்படாமலிருந்தால் என்னைப் பலாத்காரமாகக் கொண்
போகமுடியாதே' என்றது. வஸிஷ்டர், அதைக்கேட்டு, 'குணமுள்
நந்தினியே! நான் உன்னைவிடவில்லை; முடியுமானால் நிற்கலாம். கெ
டியான கயிற்றினால்கட்டி இந்த உன்கன்று பலாத்காரமாகக் கொண்
போகப்படுகிறது' என்று சொன்னார். 'நிற்கலாம்' என்று வஸிஷ்ட
சொன்னதைக்கேட்ட அந்தக்காமதேனு உயரஎடுக்கப்பட்ட தலை
கழுத்துமுடையதாகவும் கொடிய பார்வையுள்ளதாகவும் காண
பட்டது. அந்தத்தேனு, கோபத்தினால் கண்கள்சிவந்து, 'அம்ப
என்று உரக்கக்கூவிக்கொண்டு, விசுவாமித்திரருடைய அந்தச்சேனை
யெல்லாவற்றையும் துரத்திற்று. கோபத்தினால் கண்கள் சிவந்த அ
தத்தேனு சாட்டை நுனிகளாலும் தடிகளாலும் அடிக்கப்பட்டு அங்
மிங்கும் துரத்தப்படும்போது இன்னும் அதிக கோபத்தையடைந்து
வாலிலிருந்து பெரியநெருப்புமழையை அடிக்கடி வருஷித்தது
கோபத்தினால் சரீரமெல்லாம் ஜ்வலித்து மத்தியானகாலத்து ஸூர்ய
போல் பிரகாசித்தது. வாலிலிருந்து பஃலவர் என்னும் ஜாதியாரை
யும், மடியிலிருந்து திராவிடர்களையும் சகர்களையும், பின்பக்கத்
லிருந்து யவனர்களையும், சாணத்திலிருந்து பல சபரர்களையும், மூத்
ரத்திலிருந்து வேறு சிலசபரர்களையும், விலாப்பக்கங்களிலிருந்

பளண்டார்களையும், கிராதர், யவனர், ஸிம்ஹலர், பர்ப்பரர், கஸர்,
புகர், புளிந்தர், சீனர், ஹூணர், கோளர்இவர்களையும், வாய்நுரை
யிலிருந்து அனேகவிதமான மிலேச்சர்களையும், அந்தத்தேனு உண்டு
பண்ணிற்று. பலவகைகளான கவசங்களாற் போர்க்கப்பட்டவர்களும்
பலவகை ஆயுதங்களைத் தரித்தவர்களும் காமதேனுவினால் ஸ்ருஷ்டி
செய்யப்பட்டவர்களுமாகிய அந்த மிலேச்சக்கூட்டங்களாகிய பெரும்
படைகளினால் மிகுந்தகோபத்துடன் விசுவாமித்திரருடைய சேனை
அவர் பார்த்திருக்கும்போதே ஆக்ரமிக்கப்பட்டது. அப்போது, ஒவ்
வொரு போர்வீரனும் ஐந்துபேர்களாலும் ஏழுபேர்களாலும் பிடிக்
கப்பட்டான். அப்போது பெருஞ்சரமாரிகளினால் அடிக்கப்பட்ட
சேனையெல்லாம் விசுவாமித்திரர் கண்ணெதிரிலேயே தோற்றுப் பய
முற்றது. ரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைப்படைகளோடு கூடி
யதும் மிகவும் தாங்கக்கூடாத உக்கிரமுமாகிய அந்த விசுவாமித்திரர்
சைனியம் நாற்புறமும் மடிக்கப்பட்டுக் காமதேனுவினால் ஜயிக்கப்பட்
டது. பரதஸ்ரேஷ்டனே! அந்த விசுவாமித்திரருடைய சேனையிலுள்ள
வீரர்கள்யாவரும் கோபங்கொண்ட வஸிஷ்டசேனைகளினால் உயிர்
போக்கப்படவில்லை. அந்தத்தேனு அந்தச்சேனையையெல்லாம் தூரத்
துரத்திற்று. மூன்றுயோசனைதூரம் துரத்தப்பட்ட அந்த விசுவாமித்
திரசேனை பயத்தினால் கலங்கிக் கதறிக் காப்பவனை அடையாமற்
போயிற்று.

பிறகு, அந்தவிசுவாமித்திரர் பார்த்துக் கோபத்தினால் ஆவேசங்
கொண்டு ஆகாயத்தையும் பூமியையும் நிரப்புகின்ற சரமாரிகளை ரிஷி
ஸ்ரேஷ்டரானவஸிஷ்டர்மீது பொழிந்தார். விசுவாமித்திரரால் பிரயோ
கிக்கப்பட்ட கொடிய உருவமுள்ள நாராசபாணங்களையும் கத்திகளை
யும் அர்த்தசந்திர பாணங்களையும் வஸிஷ்டமாமுனிவர் மூங்கிற்றடியி
னால் ஒதுக்கினார். அப்போது, யுத்தத்தில் வஸிஷ்டர்செய்கையின் ஸாம
ர்த்தியத்தைக்கண்டு சத்ருக்களையழிப்பவராகிய விசுவாமித்திரர் அதி
க கோபங்கொண்டு அந்த ரிஷியின்மேல் திவ்யாஸ்திரங்களை மழை
யாகப்பொழிந்தார். ஆக்னேயாஸ்திரம், வாருணாஸ்திரம், ஐந்திராஸ்
திரம், யமாஸ்திரம், வாயவ்யாஸ்திரம் முதலியஎல்லாவற்றையும் சிறந்த
பெருமையுள்ள பிரம்மபுத்திரரான வஸிஷ்டர்மேல் பிரயோகித்தார்;
அந்த அஸ்திரங்கள் பிரளயகாலத்தில் உக்கிரங்கொண்ட ஸூர்ய
ரச்மிகளைப்போல் எங்கும் ஜ்வாலைகளை இறைத்துக்கொண்டுவந்தன.
மிகுந்த பிரபாவமுள்ளவஸிஷ்டரும் தம்முடையபிரம்மதேஜஸின் வன்

மையினால், பிரயோகிக்கப்பட்ட அந்த அஸ்திரங்களையெல்லாம் சிரித்து கொண்டே தண்டத்தினால் தடுத்துவிட்டார். பிறகு, அவையெல்லா நீறாகிநிலத்தில்விழுந்தன. வஸிஷ்டர், திவ்யாஸ்திரங்களை ஒதுக்கிவிட் 'மஹாராஜாவே! துராத்மாவே! காதிபுத்ரனே! தோற்றாய். இதற்குமே பட்ட பராக்கிரமம் உனக்கிருக்குமானால் அதை நானிருக்கையி காண்பி' என்றுசொன்னார். ராஜாவாகிய விசுவாமித்திரர் வஸிஷ் ரால் அவ்வாறுசொல்லப்பட்டபோது பெருஞ்சேனை வெருட்டப்பட் வெட்கம்நிரம்பினவராக ஒன்றும் பேசாமலிருந்தார். அப்போது வி வாமித்திரர் பிரம்மதேஜஸினாலுண்டான அந்தப்பெரிய ஆச்சரிய தைக்கண்டு க்ஷத்திரியஜன்மத்தில்வெறுப்புற்று, 'க்ஷத்திரியனுடை பராக்கிரமமென்னும் வன்மை நிந்திக்கத்தக்கது. பிரம்மதேஜஸி வலிமையே வலிமை. பலாபலங்களைத் தூக்கிப்பார்க்கையில் தவவ மையே சிறந்தது' என்றுசொன்னார். அவர் எல்லாவளங்களும் நிர பிய ராஜ்யத்தையும் சிறந்த அந்த ராஜ்யலக்ஷ்மியையும்விட்டு ஸுக களை அலக்ஷ்யஞ்செய்து தவத்திலேயே மனம்வைத்தார். அவ தவத்தினால் ஸித்தியையடைந்து தம்தேஜஸினால் உலகங்களையெ லாம்தகைந்து, தாபத்தையுண்டுபண்ணி ஜ்வலிக்கின்ற தேஜஸுட பிராம்மணத்தன்மையை யடைந்தார். பிறகு, விசுவாமித்திரர் இந்தி னுடன்கூட ஸோமரஸத்தையும் பானஞ்செய்தார். இவ்விதமான சக்தி யுள்ளராஜரிஷி பிரம்மரிஷியானார்' என்றான்.

---

## நூற்றுத்தோண்ணூற்றிரண்டாவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம் (தொடர்ச்சி.)

(வஸிஷ்டபுத்ரரான சக்தி *கல்மாஷபாதனுக்குச் சாபங்கொடுத்ததும், ராக்ஷஸாவேசங்கொண்ட கல்மாஷபாதன் வஸிஷ்டபுத்திரர்களைப் பக்ஷித்ததும், வஸிஷ்டர் புத்திரசோகத்தினால் தாப மடைந்து பிராணனை விடுவதற்குப் பலயத் தனங்கள் செய்ததும்.)

அர்ச்சுனன், 'கந்தர்வராஜனே! (விசுவாமித்திரர் பிரம்மரிஷி யான பிறகு) வஸிஷ்டர் விசுவாமித்திரர் இவ்விரண்டு ரிஷிகளுக்கு

* இவனுக்கு ஸௌதாஸனென்றும் மித்ரஸஹனென்றும் பெயர்களுண்

தைப்பற்றித்துவேஷம் உண்டானதோ அதைமுழுதும் எனக்குச் சொல்; கந்தர்வனே! வஸிஷ்டருடைய பிரம்மதேஜஸின் மஹிமையையும், க்ஷத்திரியரும் மஹாத்மாவுமான விசுவாமித்திரர் பிராம்மணரானதையும் கேட்டு நான் திருப்தியடையவில்லை. கந்தர்வராஜனே! கதையைச்சொல். வஸிஷ்டவிசுவாமித்திரர்களுடைய மஹிமையைச் சொல்லுகிறாய். அதனை எனக்குப் பூர்ணமாகச்சொல்' என்றுகேட்க, கந்தர்வன்சொல்லுகிறான்.

'பார்த்தனே! இந்தவஸிஷ்டருடைய சரித்திரம் * புராணம்; மிகும் புண்ணியமானது. எல்லா உலகங்களிலும் பிரஸித்தி பெற்றது. அதனை என்னிடம் கேள். பார்த்தனே! இவ்வுலகத்தில் இக்ஷ்வாகுவம்சத்தில் கல்மாஷபாதனென்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவன் இந்தப்பூமியில் ஒப்பற்றபராக்கிரமமுள்ளவன். ஒருகால் அவ்வரசன் வேட்டைக்காக நகரத்திலிருந்து வனஞ்சென்றான். சத்துருக்களைப் பீடிப்பவனாகிய அவ்வரசன் மான்களையும் பன்றிகளையும் அடித்துக்கொண்டு திரிந்தான். மிக்கபயங்கரமான அந்தவனத்தில் காண்டாமிருகங்களையும் மிகுதியாகக்கொன்றான். அவ்வரசன் நெடுநேரம் அடித்துக் களைத்து அங்கிருந்து திரும்பினான். மஹிமைபொருந்திய விசுவாமித்திரர் அவனுக்குத் தாம்பாகஞ்செய்விக்க விரும்பினார். யுத்தத்தில் தோல்வியடையாத அவ்வரசன் பசிதாகங்களினால் வருத்தப்பட்டு ஒற்றையடிப்பாதையான வழியிற்போகும்போது தனக்கு நேராக வந்த ரிஷிஸ்ரேஷ்டரான வஸிஷ்ட புத்திரரைக்கண்டான். அவன் மஹானுபாவரும் வஸிஷ்டவம்சத்தைவிருத்திசெய்கிறவரும் மஹாத்மவான வஸிஷ்டருடைய நூறுபுத்திரர்களில் மூத்தவருமான அந்தச் சக்தியென்னும் முனிவரைக்கண்டு, 'நம்முடையவழியைவிட்டுவிலகு' என்று சொன்னான். ரிஷி அவ்வாறுசொன்ன அரசனை நயமான வசனங்களினால் ஸமாதானஞ்செய்து, 'மஹாராஜாவே! இஃது என் வழி; இதுதான் சாஸ்வதமானதர்மம். கிழவன், பயந்தவன், அரசன், ஸ்நாதகன், பெண், ரோகிஷ்டன், கலியாணப்பிள்ளை, வண்டிக்காரன் இவர்களுக்கு வழிவிடவேண்டும். அவர்களில் சிலருக்கு ராஜாக்கள் வழிவிடவேண்டும். மற்றும் சிலர் ராஜாக்களுக்கு வழிவிடவேண்டும். ராஜா பிராமணனுக்கு வழிவிடவேண்டுமென்பதுதான், எல்லாத் தர்மங்களிலுமுள்ளது' என்றார். அவர்களிருவரும் வழிக்காக ஒருவர்க்

* பூர்வகல்பங்களிலுள்ளது

கொருவர் இவ்வாறு பேசினர். 'விலகு, விலகு' என்றபேச்சையே, மே
மேலும் சொன்னர்கள். தர்மப்படி தம்மார்க்கத்தில் நின்ற அந்தரி
விலகிப்போகவில்லை. ராஜாவும் கோபத்தினல் ரிஷியின்மார்க்கத்
விட்டு விலகாமலிருந்தான். அப்போது வழிவிடாமலிருந்த அந்
முனிவரை அந்தராஜஸ்ரேஷ்டன் அறிவின்மையால் ராக்ஷஸனைப்போ
கசையால் தீண்டினன். கசையால் அடிக்கப்பட்ட அந்த வஸிஷ்டபு
திரரானமுனிஸ்ரேஷ்டர் உடனே கோபமிருந்து, 'அரசர்களில் இழிவ
னவனே! நீ ராக்ஷஸனைப்போல் ரிஷியையடிக்கிருய். ஆதலால், இன்
முதல் நீ ராக்ஷஸனவாய். மனிதர்மாம்ஸத்தில் ஆசைவைத்து இந்த
பூமியெல்லாம் திரிவாய்' என்று அந்தராஜஸ்ரேஷ்டனைச் சபித்தா
தவவன்மையையே சக்தியாகவுடைய சக்திமுனிவரால், 'ராஜாத
னே !செல்' என்று அவன் சொல்லப்பட்டான். அவனுக்குப் புரோஹ
தர்களாயிருக்கிறநிமித்தம் விசுவாமித்திருக்கும் வஸிஷ்டருக்கு
விரோதமிருந்தது. அந்தச்சமயத்தில் விசுவாமித்திரர் அவனிடம் வ
தார். பார்த்தனே! (சக்தியும் கல்மாஷபாதனுமாகிய) அவர்களிருவரு
இவ்வாறு விவாதப்பட்டுக்கொண்டிருக்கையில் உக்கிரமானதவமுள்ள
வரும் பிரபாவமுள்ளவருமாகிய விசுவாமித்திரரிஷி ஸமீபத்தில்வ
தார். அதன்பிறகு, அந்தராஜஸ்ரேஷ்டன் தேஜஸில் வஸிஷ்டருக்கொ
பான அந்தச்சக்திமஹரிஷியை, வஸிஷ்டமஹரிஷியின் புத்திரரென்
அறிந்தான். பார்த்தனே! பிறகு, விசுவாமித்திரரும் தம்மையொளித்து
கொண்டு தம்விருப்பத்தைச் செய்யக்கருதி அவ்விருவரையும் (மறை
ந்து) தாண்டிச்சென்றார். அந்தச்சக்தியென்னும் ரிஷியினல் சபிக்க
பட்டிருந்த அந்தராஜச்ரேஷ்டன் அப்போது அவருடைய கோப
தைத்தெளிவிப்பதற்கு அவரைப்பூஜித்துச் சரணமடைந்தான்.

குருஸ்ரேஷ்டனே ! அந்தவிசுவாமித்திரர் அவ்வரசனுடையஎண்
ணத்தையறிந்து உடனே ராஜாவின்மீது ஒரு ராக்ஷஸனை ஏவினர்
அந்தப்பிரம்மரிஷியான சக்தியின்சாபத்தினலும் விசுவாமித்திருடை
ய ஏவலினலும் கிங்கரனென்னும்ராக்ஷஸன் அப்போதே ராஜாவின்மே
ஆவேசமானன். வீரனே! அவனை ராக்ஷஸனல்பீடிக்கப்பட்டவன
அறிந்து ரிஷிஸ்ரேஷ்டரானவிசுவாமித்திரர் அவ்விடத்திலிருந்து வி
கிப்போனர். பிறகு, தெரிந்தவனன அவ்வரசன் உள்ளேயிருக்கு
ராக்ஷஸனல் பலமாகப் பீடிக்கப்பட்டிருந்தபோதிலும் தன்னைத் தன
புத்தியினல் அடக்கிக்கொண்டிருந்தான். முன்னே ராஜா வன

ற்குப்புறப்படும்போதே பசியினால்வருந்தின ஒருபிராம்மணன் கண்டு
ாம்ஸஞ்சேர்ந்த உணவை யாசித்தான். அப்போது மித்திரர்களை
தரிப்பவனாகிய அந்த ராஜரிஷி அந்தப்பிராம்மணனைப்பார்த்து,
ிராம்மணா! நீ இங்கேயே சற்றுநேரம் காத்திரு; திரும்பிவந்தபிறகு
ிரும்பினபோஜனத்தை உனக்குத்தருவேன்' என்று சொன்னான். இவ்
ாறுசொல்லிவிட்டு ராஜா சென்றான். பிராம்மணஶ்ரேஷ்டன் அங்கே
ன்றான். பார்த்தனே! பிறகு, ராஜா பெரியமனமுள்ள தன்விருப்பம்
பால் ஸுகமாகத்திரிந்து திரும்பிவந்து அந்தப்புரத்திற் பிரவேசித்
ான். அந்த அரசன் பிராம்மணன் சொன்னதைக் கேட்டுக்கொண்டு
ள்ளேபோய் அந்தப்புரம் சென்றபின் அதனை மறந்துவிட்டான்.
ிறகு, அரசன் நள்ளிரவிலெழுந்து பிராம்மணனுக்கு வாக்குத்தத்தஞ்
சய்ததை நினைத்து உடனே சமையற்காரனை வருவித்து, 'போ; இந்த
னத்தின் ஆரம்பத்தில் ஒரு பிராம்மணன் அன்னத்தைவேண்டி
ன்னை எதிர்பார்த்திருக்கிறான். அவனை மாம்ஸம்சேர்ந்த அன்னத்தி
ால் நீ திருப்திசெய்விக்கக் கடவாய்' என்றான். இவ்வாறு சொல்லப்
ட்டவுடன், அந்தச் சமையற்காரன் எங்கும் மாம்ஸம்கிடைக்காமை
ால் வருத்தத்துடன் அதனை அந்த அரசனுக்குத் தெரிவித்தான்.
ாக்ஷஸனால் ஆவேசிக்கப்பட்ட அரசன் சமையற்காரனைப் பார்த்து,
னிதர் மாமிசத்தினாலாவது அவனுக்குப்போஜனம் செய்வி' என்று
னத்தில் வருத்தமில்லாமல் பலமுறை சொன்னான். பிறகு, சமை
ற்காரன், 'அப்படியே செய்கிறேன்' என்று சொல்லிக் கொல்லப்
டத்தக்கவர்களைக்கொல்லுகிறவர்களிருக்கும் இடத்திற்குச் சென்று
ச்சமின்றி நரமாம்ஸத்தைக்கொணர்ந்தான். அதனை உடனே முறைப்
டி சமைத்து அன்னத்துடன் சேர்த்துத் தவமுடையவனான அந்
ப் பசித்த பிராம்மணனுக்குக் கொடுத்தான். அந்தப் பிராம்மணஶ்ரே
ஷடன் தன்யோகதிருஷ்டியினால் அந்த அன்னத்தைத் தெரிந்துகொ
ண்டு கோபத்தினால் கலங்கின கண்களுடன், 'இது புஜிக்கத்தகாது'
ன்றும், 'அந்த அதமனான ராஜா உண்ணத்தகாத உணவை எனக்
குக்கொடுத்ததனால் முன்னே சக்தி சொன்னபடி மனிதர் மாம்ஸங்க
ில் விருப்பமுற்றுப் பிராணிகள் அச்சப்படும்படி இந்தப்பூமியெல்
ாம் திரிவான்' என்றும் சொன்னான். இரண்டாந்தரம் வற்புறுத்திச்
சால்லப்பட்ட பிறகு ராஜாவுக்கு அந்தச்சாபம் உறுதிப்பட்டது.
ாக்ஷஸனுடைய பலத்தினால் ஆவேசிக்கப்பட்ட அரசன் அறிவிழந்
வனானான். பாரதனே! பிறகு, ராக்ஷஸனால் அறிவுபோக்கப்பட்ட
ந்த ராஜஶ்ரேஷ்டன் சிலகாலத்துக்குப்பின் அந்தச்சக்திமுனிவரைக்

கண்டு, 'இந்தத் தகாத சாபத்தை நீர் என்மேல் பிரயோகித்ததனு முதலில் உம்மைத் தொடங்கித்தான் நான் மனிதர்களைத்தின் ஆரம்பிக்கப் போகிறேன்' என்று சொன்னான். இவ்வாறு சொன் பிறகு, உடனே அந்தச்சக்திமுனிவருடைய உயிரைப்போக்கி, பு பசுவைத் தின்பதுபோல் விருப்பத்துடன் அவரைத்தின்றான். சக் யிறந்துபோனதைக் கண்டு, பிறகு, விசுவாமித்திரர் திரும்பத்திரும் வஸிஷ்டர்புத்திரர்களின்மீதே அந்த ராக்ஷஸனை ஏவினார். அவ்வ சன் கோபித்துச் சக்திக்கு இளையவர்களும் மஹாத்மாக்களுமா வஸிஷ்டரின் புத்திரர்களை ஸிம்மம் அற்பமிருகங்களைப் பக்ஷிப்ப போல் பக்ஷித்தான்.

அந்தப்புத்திரர்கள் விசுவாமித்திரரால் கொல்விக்கப்பட்டதை கேட்டு வஸிஷ்டர் அந்தத்துயரத்தைப் பெரியமலை பூமியைத்தாங் வதுபோலத் தாங்கினார். அந்த ரிஷிஸ்ரேஷ்டர் தாம் இறப்பதற்கு எண்ணங்கொண்டார். ஞானமுள்ளவர்களிற் சிறந்த அவர் விசுவாமி திரரையழிப்பதைப்பற்றிமட்டும் நினைக்கவேயில்லை. அந்த வஸிஷ் பகவான் மஹாமேருவின் சிகரத்திலிருந்து தமது சரீரத்தை விழ் தினார். அம்மலையின்பாறையின்மேல் பஞ்சுப்பொதியின் மேல்விழுவது போல் விழ்ந்தார். பாண்டவனே! அந்தப்பகவான் அப்படி வி தலினால் மரணமடையாமற் போனபோது மஹாவனத்தில் ஜ்வலிக் ன்ற அக்னியில் பிரவேசித்தார். அப்போது செம்மையாக எரிந்துகொ ண்டிருந்த அக்னியும் அவரைக் கொளுத்தவில்லை. சத்துருக்க ஸம்ஹரிப்பவனே! அங்கே ஜ்வலிக்கின்ற அக்னியும் அவருக்குக்கு ர்ச்சியாகவேயிருந்தது. சோகாவேசங்கொண்ட அம்மாமுனி ஸமு திரத்தைக்கண்டு உடனே பெரும்பாறையைக் கழுத்தில் கட்டிக்கொ ண்டு அதன் ஜலத்தில் விழுந்தார். அம்மஹாமுனிவர் கடலின் அ வேகத்தினால் கரையில் ஒதுக்கப்பட்டனர். கடுமையான தவமுள் அந்தப் பிரமரிஷி எவ்வகையிலும் எப்போது மரணமடையவில்லையே அப்போது துயரத்துடன் திரும்பவும் ஆஸ்ரமத்திற்குச்சென்றார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றுமூன்றாவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம் (தொடர்ச்சி.)



(சில உபாயங்களால் பிராணனை விடமுயன்றும் அது நேராமற்போகவே வஸிஷ்டர் மறுபடி கங்கையிலிவிழுந்தும் பிராணன்போகாமையால் ஆச்ரமத்துக்குத் திரும்பிவந்ததும், அங்கேவந்த சக்தியின்பாரியையான அதிருச்யந்தி கர்ப்பமாயிருப்பதைத் தெரிந்துகொண்டு தற்கொலைசெய்துகொள்வதை நிறுத்தினதும், அதிருச்யந்தியுடன் கூடப்போதும் வஸிஷ்டரைப் பக்ஷிப்பதற்குவந்த கல்மாஷபாதனுக்கு அவர் சாபவிமோசனஞ்செய்வித்ததும், அவனுடைய மனைவி வஸிஷ்டரிடம் கர்ப்பத்தையடைந்து அச்மகனைப் பெற்றதும்.)

பிறகு, புத்திரர்களில்லாத அந்த ஆஸ்ரமத்தைக்கண்டு மிகுந்த துயரத்தினால் பீடிக்கப்பட்ட அந்தமுனிவர் அந்த ஆஸ்ரமத்திலிருந்து மறுபடியும் வெளியிற்சென்றார். பார்த்தனே! அவர், கார்காலத்தில் புதுஜலம் நிரம்பினதும் கரையில்முளைத்த பலவகைமரங்களை மிகுதியாக இழுத்துக்கொண்டு போவதுமாகிய நதியைக்கண்டனர். கௌரவபுத்திரனே! துன்பமுற்ற அவர் அதைக்கண்டவுடனே, 'இந்நதியின் ஜலத்தில் மூழ்கிவிடுவேன்' என்று மறுபடியும் நினைத்தனர். மிகுந்த துயரமுற்ற அம்மஹரிஷி; பிறகு, தம்சரீரத்தைக் கயிறுகளினால் உறுதியாகக் கட்டிக்கொண்டு அம்மஹாநதியின் ஜலத்தில் மூழ்கினார். எதிரிகளின் படைகளையொழிப்பவனே! பிறகு, அந்நதி அவருடைய கட்டுக்களையறுத்து அம்முனிவரைக் கட்டில்லாமல் தரையிலிருக்கும்படி விட்டுவிட்டது. கட்டுக்களினால் விடப்பட்ட அம்மஹரிஷி அந்நதியிலிருந்து கரையேறினார். மஹரிஷி அந்நதிக்கு * விபாசையென்று பெயர்வைத்தனர். பாரதனே! புருஷஸ்ரேஷ்டனே! சொல்தவறாதவராகிய அந்தரிஷியின் சொல்லினால் அந்நதி உலகத்தில் விபாசையென்று கியாதிபெற்றது. அரசனே! துக்கமுள்ள வஸிஷ்டபகவான் அப்போது கரையேறி உடனே புத்தியை வ்யஸனத்திலேயே செலுத்தினார்; ஓரிடத்திலும் நிற்கவில்லை. அவர் மலைகளுக்கும் நதிகளுக்கும் தடாகங்களுக்கும் சென்றார். அவர் அப்போது கொடிய முதலைகளையுடையதும் பயங்கரமுமான இமயமலையின் நதியைக்கண்டு

* கட்டை விடுத்தது.

திரும்பவும் அதன்ஜலத்தில் வீழ்ந்தார். அந்தச்சிறந்தஆறும், அந்த பிரமரிஷியை அக்கினிக்கொப்பானவரென்று நினைத்து நூறுபிரி களாகப் பிரிந்தோடிற்று. அதனால் அது * சதத்ரு என்று பெயர்பெ றது. பிறகு, அதிலும் தாம்தரையிலிருக்கக்கண்டு தாமாக மரணமடை வது யாருக்கும்கூடாத காரியமென்றுசொல்லித் திரும்பவும் ஆஸ் மத்திற்கே சென்றார். அவர் பலவிதமலைகளும் பலவகைத்தேசங்களு போனபிறகு ஆஸ்ரமத்தில் அதிருஸ்யந்தியென்று பெயருள்ள மருமக ளாற் பின்செல்லப்பட்டார். பிறகு, அவள் பின்னே ஸமீபித்து வந் தனால், பொருள்நிரம்பினதும் ஆறு அங்கங்களாகிய சிக்ஷை, வியாக ணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிஷம், கல்பம் இவற்றினால் அலங்கரி கப்பட்டதுமாக வேதம் ஓதுகிற குரலைச்செவியுற்றார். பிறகு, 'யா இவன்? என்பின் வருகிறான்' என்று அவர்கேட்டனர். மிகுந்த பாக்கி முள்ளவனே! அவர் இவ்வாறு சொன்னபின் அவர்மருமகளும் சக் யின் மனைவியும் தவமுள்ளவளுமாகிய அதிருச்யந்தியானவள் அ முனிவரை நோக்கி, 'நானொருத்திதான் உம்முடன் வருகிறேன். ம றொருவருமில்லை' என்று மறுமொழி சொன்னாள். வஸிஷ்டர், 'மகளே வேதவேதாங்கங்களை ஓதுகிற இந்தக்குரல் யாருடையது? முன்ன சக்தி ஸாங்கவேதாத்யயனஞ்செய்த குரலைப்போல் எனக்குக்கேட்டதே' என்றார். அதிருச்யந்தி, 'முனிவரே! உமது புத்ராராகிய சக்தியின் கர்ப்பம் என்வயிற்றில் இதோஉண்டாயிருக்கிறது. இந்தவயிற்றிலே அந்தக்கர்ப்பம் வேதாத்யயனஞ்செய்ய ஆரம்பித்துப் பன்னிரண்டு வருஷங்கள் ஆகின்றன' என்று சொன்னாள்.

அர்ஜுனா! சிறப்புற்றவரான வஸிஷ்டரிஷி அவள் இவ்வாறு சொல்லக்கேட்டு மகிழ்ந்து, 'ஸந்தானம் இருக்கிறது' என்று சொல்லி மரணத்திலிருந்து நிவர்த்தியானார். குற்றமற்றவனே! அவர் அங்கிரு ந்து அம்மருமகளுடன்கூடத் திரும்பிவரும்போது ஜனங்களில்லாத காட்டில் உட்கார்ந்திருந்த கல்மாஷபாதனைக்கண்டார். பாரதனே உக்கிரமான ராக்ஷஸனால் ஆவேசிக்கப்பட்ட அவ்வரசன் அவரை கண்டதும் கோபித்தெழுந்து அப்போதே அம்முனிவரைப் பக்ஷிக்க கருதினான். அதிருஸ்யந்தி கொடிய செய்கையுள்ள அவனை நேரி கண்டு வஸிஷ்டரைப்பார்த்துப் பயத்தினால் தழுதழுத்த குரலோடு 'பகவானே! உக்கிரமான தண்டாயுதத்தோடு யமன்வருவதுபோல கையிற்பிடித்த தடியோடு இந்தக்கொடிய ராக்ஷஸன் இங்கே வருகிறான்

* நூறாக ஓடினது.

ஹானுபாவரே! வேதந்தெரிந்தவரெல்லாரினும் சிறந்தவரே! இவனைத் தப்பதற்குத் திறமையுள்ளவன் இப்புவியில் இப்போது உம்மைத் தவிர வேறொருவரும் இல்லை. பகவானே! பார்ப்பதற்குப்பயங்கரமான இந்தப்பாவியினிடமிருந்து என்னைக் காப்பாற்றும்; நிச்சயமாக இந்த ராக்ஷஸன் இங்கே நம்மிருவரையும் பக்ஷிக்கக்கருதுகிறான்' என்றாள். வஸிஷ்டர், 'பெண்ணே! அச்சப்படாதே; ராக்ஷஸனுக்கு அஞ்சவேண்டியது எவ்வகையினுமில்லை. யாரால் பயம்வந்திருப்பதாக நீ பார்க்கிறாயோ இவன் அரக்கனல்லன். இவன் பூமியில்புகழ்பெற்ற பராக்ரமசாலியான கல்மாஷபாதனென்னும் அரசன். அவன் இவ்வாறு மிகவும் பயங்கரனாக இந்தவனப்பிரதேசத்தில் வஸிக்கிறான்' என்றார். பாரதனே! சிறந்தமஹிமையுள்ளவஸிஷ்டபகவான் அவன் ஓடிவரக்கண்டு ஹுங்காரத்தினாலேயே நிறுத்தினார். மறுபடியும் மந்திரசுத்தமானதீர்த்தத்தால் அவ்வரசனுக்குப் புரோக்ஷணஞ்செய்து தமதுயோகமஹிமையால் சாபநிவர்த்தி செய்வித்தார். அவன் பன்னிரண்டுவருஷகாலம் வஸிஷ்டபுத்திரராகிய சக்தியின் பிரபாவத்தினால், அமாவாசைக்காலத்தில் ஸூர்யன் ராகுகேதுக்களாகிய கிரஹத்தினால் பீடிக்கப்படுவதுபோல் பீடிக்கப்பட்டிருந்தான். பிறகு, அவ்வரசன் ராக்ஷஸனால் விடப்பட்டு ஸந்தியாகாலத்து மேகத்தை ஸூர்யன் சிவக்கச்செய்வதுபோல் அந்தப் பெருவனத்தைத் தன்ஒளியினால் சிவந்ததாகச் செய்தான். உடனே, அவ்வரசன் பழைய ஞாபகத்தையடைந்து முனிஸ்ரேஷ்டரான வஸிஷ்டரை நமஸ்கரித்துக் கைகூப்பிக்கொண்டு, 'மஹானுபாவரே! முனிஸ்ரேஷ்டரே! நான் ஸுதாஸபுத்திரன். உம்மால் யாகஞ்செய்விக்கப் பெற்றவன். இந்தக்காலத்தில் உமக்கு என்னவிருப்பமோ அதைச்சொல்லும். உமக்கு நான் என்னசெய்யக்கடவேன்?' என்று அப்பொழுது கேட்டான். அதைக்கேட்ட வஸிஷ்டர், 'எனக்கு நேர்ந்த துக்கமாகிய இது, காலத்தை யனுஸரித்து நடந்துபோயிற்று. நீ செல். ராஜ்யத்தையாளு. அரசனே! பிராம்மணனைமட்டும் ஒருபோதும் அவமதிக்காதே' என்று சொன்னார். அதற்கு அரசன், 'மஹானுபாவரே! நான் இனி ஒருபோதும் பிராமணஸ்ரேஷ்டர்களை அவமதிப்பதில்லை. நான் உமது கட்டளைப்படி பிராம்மணர்களைச் செம்மையாகப் பூஜிப்பேன். பிராம்மணோத்தமரே! வேதம்தெரிந்தவரெல்லாரினும் சிறந்தவரே! நான் எதனால் இக்ஷ்வாகுவம்சத்துக்கூடஸ்தர்களுக்குக் கடன் தீர்ந்தவனாவேனோ அதை உம்மிடத்திற் பெறவிரும்புகிறேன். இக்ஷ்வாகு வம்சத்தின் அபிவிருத்திக்காக என்னால்விரும்பப்படும் புத்திரஸந்தானத்தின்பொருட்டு ஒழுக்கமும் அழகும் குணமும் நிரம்பின என்மனைவி

யிடம் சேரக்கடவீர்' என்றுசொன்னான். சொன்னசொல்தவறாத பிரா
ஹ்மணோத்தமரான வஸிஷ்டர், சிறந்த வில்லாளியாகிய அவ்வரசனைநோக்
'கொடுப்பேன்' என்பதாகவே அந்த விஷயத்திற்கு மறுமொழி சொ
ன்னார். ராஜாவான அர்ஜுனனே! அந்தக்காலத்தில் வஸிஷ்டர் அவ்வ
னோடுகூடவே உலகத்திற் பெயர்பெற்ற அயோத்தியென்னும் நகரத்தி
குச் சென்றார். ஜனங்களெல்லாரும் பாபம்நிவர்த்தியான அம்மஹா
மாவான ராஜாவை இந்திரனைத் தேவர்களழைப்பதுபோல் ஸந்தோ
ஷத்துடன் எதிர்கொண்டழைத்தனர். வெகுகாலத்துக்குப்பின் அ
சன் அந்த வஸிஷ்டமஹரிஷியுடன் சேர்ந்து அழகான லக்ஷண
களோடுகூடிய அந்நகரத்தில் பிரவேசித்தான். ஸூர்யோதயமான
போல் புரோஹிதருடன் வந்த அந்த அரசனை அயோத்தியிலிருக்கு
ஜனங்கள் கண்டனர். அழகுள்ளவர்களிற் சிறந்த அவ்வரசன் சரத்கால
தில் உதயமான சந்திரன் ஆகாயத்தைத் தன்னொளியினால் நிரம்பச்செ
வதுபோல் அவ்வயோத்தி நகரத்தைத் தன்னொளியினால் நிரப்பினா
நீர்தெளித்து விளக்கப்பட்ட வீதிகளையுடையதும் கொடிகளாலு
கொடிமரங்களாலும் பிரகாசிப்பதுமாகிய அந்தச் சிறந்தநகரம் அ
வரசனுள்ளத்தை மகிழ்வித்தது. கௌரவபுத்திரனே! அப்போது ஸ
தோஷமும் செல்வமும் நிரம்பின ஜனங்களுள்ள அந்நகரம் இந்தி
னால் அமராவதி சோபிப்பதுபோல் அவ்வரசனால் சோபித்தது. அந்
ராஜரிஷி அந்தச்சிறந்த பட்டணத்திற் பிரவேசித்த பிறகு, அந்தரா
வின் ஆஜ்ஞையினால் அவனுடைய மனைவி வஸிஷ்டரிடம் சென்றா
சிறப்புற்றவராகிய வஸிஷ்டமஹரிஷி, பிறகு, ருதுகாலம் வந்தபோ
* தேவதைகளின் நடையையனுஸரித்து அந்த அரசியுடன் சேர்ந்தா
உடனே அவளுக்குக் கர்ப்பம் உண்டாக, அம்முனிஸ்ரேஷ்டர் அவ்வா
னால் வந்தனஞ்செய்யப்பட்டுத் தமது ஆஸ்ரமத்திற்குச்சென்றார். புக
பெற்ற அந்த அரசி நீண்டகாலமாகியும் அந்தக்கர்ப்பத்தைப் பிர
விக்காமலிருந்தபோது கல்லினால் வயிற்றிலிடித்துக்கொண்டாள். அ
னால், பன்னிரண்டாவது வருஷத்தில் அந்தக்கர்ப்பம் புருஷஸ்ரேஷ்
னாகிய அச்மகன் என்னும் ராஜரிஷியாகப்பிறந்தது. அவன் பௌத
யம் என்னும் பட்டணத்தை நிர்மாணஞ்செய்தான்.

---

* ஸ்பரிசமாத்திரத்தினால்.

## நூற்றுத்தொண்ணூற்றுநான்காவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம் (தொடர்ச்சி.)



(பராசரர் பிறந்ததும், கல்மாஷபாதன் தமது பிதாவைக் கொன்றதைக்கேட்டு அவர் உலகத்தை நாசஞ்செய்ய யத்தனித்ததும், வஸிஷ்டர், அவருக்குக் கார்த்தவீர்யனைச்சேர்ந்த க்ஷத்திரியர்கள் தனத்துக்காகப் பிருகுவம் சத்துவர்களைக் கொன்றதையும் பயந்தோடின ஒரு பிராம் மணியின் துடையில் தரித்திருந்தகர்ப்பத்தைக் கொல்ல முயலும்போது துடையைப்பிளந்து கொண்டு வெளியில் வந்த குழந்தையின் தேஜஸினால் அவர்கள் குருடராகப் பிராம்மணியைச் சரணமடைந்ததையும் சொன்னதும்.)

ராஜாவான அர்ச்சுனா! பிறகு, ஆச்ரமத்திலிருந்த அதிருஸ் யதியென்பவள் சக்தியின் குலத்தை விருத்திபண்ணுகிறவனும் இரண் டாவது சக்தியைப்போன்றவனுமான குமாரனைப் பெற்றாள். பரத ச்ரேஷ்டனே! அந்தப் பகவானான வஸிஷ்டமாமுனிவர் அந்தப் பேர னுக்கு ஜாதகர்மமுதலிய ஸம்ஸ்காரங்களைத் தாமே செய்தார். இறந்து போவதற்காக இருந்த அந்த வஸிஷ்டமுனிவர் அந்தக்குழந்தை கர்ப் பத்திலிருந்த மாத்திரத்தினாலே நிலைபெறச்செய்யப்பட்ட படியால், அந்தக்குமாரர் பராசரர் என்று உலகத்திற் பெயர்பெற்றார். தர்மாத்மா வாகிய அந்தப்பராசரமுனி ஜனித்ததுமுதல் தந்தையுடனிருப்பது போல் அந்த வஸிஷ்டருடன் விடாமலிருந்ததனால் அவரையே தந்தை யாக நினைத்தார். பகைவரைத் துயரப்படுத்துகிறவனாகிய அர்ச்சுனா! அந்தப்பராசரர் தம் தாயான அதிருஸ்யந்தியின் முன்னிலையில் பிரம்ம ர்ஷியான வஸிஷ்டரை நோக்கி, 'தந்தையே!' என்றழைத்தார். அந்தக் குமாரர், 'பிதாவே!' என்று நிறைந்த அர்த்தத்தோடுசொன்ன அந்த இன்சொல்லைக்கேட்டு அதிருச்யந்தி நீர்நிரம்பின கண்களோடு அந்தப் பாலனை நோக்கி, 'குழந்தாய்! தந்தைக்குத்தந்தையாகிய இவரை, 'பிதாவே' என்று அழைக்காதே. குழந்தாய்! உன்தந்தை நடுக்காட் டில் ராக்ஷஸனால் பக்ஷிக்கப்பட்டார். மாசற்றவனே! யாரைத் தந்தை யென்று நினைக்கிறாயோ இவர் உனக்குத்தந்தையல்லர். இந்தப்பெரிய புகழ்பெற்ற அந்த உனது தந்தைக்குத்தந்தை' என்றாள். தவறு மொழியரும் சிறந்த மனமுள்ளவருமாகிய அந்தப்பராசரமஹரிஷி,

தாயாரால் இவ்வாறுசொல்லப்பட்டபின் துயரமுற்று எல்லாலோ
களையும் அழிப்பதற்கு எண்ணங்கொண்டார்.

அவ்வாறு மனத்துள் நிச்சயஞ்செய்த அந்தப்பராசரரை மஹ
மாவும் மஹாதபஸ்வியும் பிரம்மஜ்ஞானிகளிற் சிறந்தவரும் மேல
அறிவுள்ளவரும் மைத்ராவருணியென்று சொல்லப்பட்டவருமா
அந்தவஸிஷ்டர் என்னகாரணத்தினால் தடுத்தாரோ அதைக்கேள். வ
ஷ்டர் பராசரருக்குச்சொல்வது:—

'வேதம் தெரிந்தவர்களாகிய பிருகுவம்சத்தவரால் யாகஞ்செ
விக்கப்பெற்றவனும் அரசரிற்சிறந்தவனுமாகிய கிருதவீர்யன் எ
னும் கியாதிபெற்ற ராஜா ஒருவன் இவ்வுலகத்தில் இருந்தான். கு
ந்தாய்! முதல்போஜனத்துக்குத்தகுதியுள்ள அந்தப் பார்க்கவர்க
ஸோமபானமானவுடன் நிரம்பின தனதான்யங்களினால் திருப்திசெ
வித்தான். அந்தராஜஶ்ரேஷ்டன் ஸ்வர்க்கஞ்சென்றபின் ஒருகாலத்தி
அவன் குலத்தோருக்குத் திரவியத்தின்உபயோகம் கடுமையாக நே
தது. அவ்வரசர்களனைவரும் பார்க்கவர்களிடம் தனமிருப்பதைத்தெ
ந்துகொண்டு உடனே யாசிப்பதற்காக அந்தப் பார்க்கவஶ்ரேஷ்ட
ளிடம் சென்றனர். பார்க்கவர்களிற்சிலர் திரவியத்தையழியாமல் பூ
குள் புதைத்தனர். சிலர் க்ஷத்திரியர்களால் பயம் நேரிடுவதையறிந்
பிராம்மணர்களுக்குத் தானஞ்செய்தனர். குழந்தாய்! மற்றும் சிலப
க்கவர்கள் அந்த க்ஷத்திரியர்களுக்குத் திரவியம்வேண்டிய அவசிய
தைத் தெரிந்துகொண்டு அவர்களுக்குவேண்டியபடி தனத்தைக் கெ
டுத்தனர். குழந்தாய்! பிறகு, ஒருகால் ஒரு க்ஷத்திரியன் தற்செயல
ஒரு பார்க்கவர்வீட்டில் பூமியைத்தோண்டினதனால் அவனுக்குத் தி
வியம் கிடைத்தது. அந்தத்தனத்தை க்ஷத்திரியச்ரேஷ்டர்களனை
ரும்கூடியே பார்த்தனர். பிறகு, அந்தச் சிறந்தவில்லாளிகள் கோப
தால் அந்தப்பார்க்கவர்களை நிராகரித்துச் சரணமடைந்த அவர்களை
வரையும் கூர்மையான அம்புகளினால் அடித்தனர். கர்ப்பத்திலிரு
கிற சிசுமுதலாக எல்லாரையும் வெட்டிக்கொண்டு பூமியெல்லாம் தி
ந்தனர். இவ்வாறு அவர்கள் பார்க்கவர்களை அழிக்கும்போது அவ
ளின் மனைவிகள்பயத்தினால் இமயமலையாகிய துர்க்கத்தையடைந்தன
அவர்களில் அழகியதுடைகளையுடையவளாகிய ஒருத்தி தன்பர்த்த
வின்குலம் விருத்தியாவதற்காகப் பயத்தால்வெளிப்பட்ட சிறந்த ப
பாவமுள்ள கர்ப்பத்தை ஒற்றைத்துடையினால் தாங்கினள். ஒரு பி

ணப்பெண் அந்தக் கர்ப்பத்தைக்கண்டு பயத்தினல் கலக்கமுற்று டனே க்ஷத்திரியர்களிடம்சென்று ரகஸ்யமாகத் தெரிவித்தாள். டனே, அந்தக்ஷத்திரியர்கள் அந்தக் கர்ப்பத்தைக் கொல்லும் யத் ரத்துடன் சென்றனர். பிறகு, அவர்கள், தன் ஒளியினல் ஜ்வலிக் ன்ற பிராம்மணப்பெண்ணைக் கண்டனர். உடனே அந்தக்கர்ப்பம் அந்தப் பிராம்மணப் பெண்ணின் துடையைப் பிளந்துகொண்டு மத்தி ானகாலத்துச் சூரியனைப்போல் க்ஷத்திரியர்களுடைய திருஷ்டிகளை அபகரித்துக்கொண்டு வெளிப்பட்டது. அதனல், அவர்கள் கண்ணில் ாமல் மலைத்துர்க்கங்களில் தடுமாறினர். அப்போதும் எண்ணம்வீணு ப்போன அவ்வரசர்கள் பயத்தினல் கலக்கமுற்றுக் கண்ணை வேண்டி அந்தச்சிறந்த பிராம்மணப்பெண்ணைச் சரணமடைந்தனர். அந்த திகெட்ட அரசர்கள் துயரமுற்று அவிந்த அக்னியைப்போல ஒளி முங்கி மஹானுபாவையான அந்தப்பிராம்மணியைநோக்கி, 'பெருமை பற்ற அம்மாளுடைய தயையினல் க்ஷத்திரியஜாதி க்ஷேமத்தை டையவேண்டும். எல்லோரும் பாபச்செய்கையை நிவ்ருத்திசெய்து சல்வோம். சிறந்தவளே! நீ உன் புத்திரனுடன்கூட எங்கள்மீது யைசெய்யக்கடவாய். மறுபடியும் கண்ணைக்கொடுத்து வேந்தர்களைக் காப்பாற்றுவாயாக' என்று வேண்டினர்.

---

## நூற்றுமுப்பத்தோண்ணூற்றைந்தாவது அத்தியாயம்.

## சைத்ராதபர்வம் (தொடர்ச்சி.)

(பிராம்மணியின் சொல்லைக்கேட்டு ஒளர்வனைச் சரணமடைந்த க்ஷத்திரியர்களுக்குக் கண்கிடைத்ததும், உலகத்தை நாசஞ்செய்யத்தவஞ்செய்யும் ஒளர்வனை அவர்பிதா அவனுடைய தவத்திலிருந்து விலக்கியதும்.)

**அ**தனைக்கேட்டு, அந்தப்பிராம்மணி, 'புத்ரர்களே! நான் கோபங் காண்டு உங்கள் கண்களைப்பறித்துவிடவில்லை. பிருகுவம்சத்தவ றன இந்த * ஊருஜன் இப்போது உங்கள்மேல் கோபித்திருக்கின்றான். பிள்ளைகளே! அம்மஹாத்மா தன்பந்துக்கள் கொல்லப்பட்டதை னைத்துக் கோபத்தினல் உங்கள் கண்களைப்பறித்திருக்கிறான்; சந்தேக மில்லை. புத்திரர்களே! நீங்கள் பிருகுவம்சத்தவரின் கர்ப்பங்களைக்கூட ப்போது கொன்றீர்களோ அப்போது இந்தக் கர்ப்பம் நூறுவருஷ

* துடையிற் பிறந்தவன்.

காலம் என்னால் துடையிலடக்கிவைக்கப்பட்டிருந்தது. இவன்கர்ப்பத்தி விருக்கையிலேயே ஆறு அங்கங்களோடுகூடிய வேதமெல்லாம் ப்ருகு வம்சத்துக்கு மேன்மேலும் நன்மையைச் செய்யக்கருதி இவனிடம் பிரவேசித்தன. அப்படிப்பட்ட இவன் பிதிர்வதத்தினாலுண்டானகோபத்தினால் உங்களைக்கொல்ல விரும்புவது நிச்சயம். அவனுடைய திவ்ய தேஜஸினாலேதான் உங்கள்கண்கள் பறிக்கப்பட்டன. அந்த ஔர்வனாகிய எனது உத்தமபுத்திரனையே நீங்கள் வேண்டிக்கொள்ளுங்கள் உங்களுடைய நமஸ்காரத்தினால் இவன் ஸந்தோஷமடைந்து கண்களை கொடுப்பன்' என்றுசொன்னாள். அவளால் இவ்வாறு சொல்லப்பட்ட அவ்வாசர்களனைவரும் உடனே அந்த ஊருஜனைப்பார்த்து, 'தயைசெய்யும்' என்று கேட்டுக்கொண்டனர். அப்போது அவர் தயைசெய்தார். அந்தச் சிறந்தபிரம்மரிஷி துடையைக் கிழித்துக்கொண்டு பிறந்தனர் இந்தக்காரணம்பற்றி ஔர்வரென்னும் பெயரினால் உலகத்தில் ப்ரக்யாதிபெற்றார். அப்போது அரசர்கள் மறுபடியும் அவரால் கண்களை பெற்றுத் திரும்பிச்சென்றனர்.

அந்தப் பார்க்கவரான முனிவர் எல்லாலோகங்களுக்கும் கெடுதியைக்கருதினார். அப்பா! அவர் அப்போது எல்லாஉலகங்களையும்அழிப்பதற்காக நினைத்துத் தம்மனம் முழுவதையும் அதுவிஷயத்தில் ஏகாக்ரமாகச்செய்தார். மிகுந்ததவத்தினால் ஜ்வலித்த அந்தப் பிருகுவம்சபுத்திராகிய ஔர்வமுனிவர் தமது பிதிர்க்களைத் திருப்தி செய்விப்பதற்காகப் பார்க்கவர்களின் பகைதீர்க்க விரும்பி எல்லாலோகங்களும் அழியும்படி தேவாஸுரமனுஷ்ய லோகங்களையெல்லாம் உக்கிரமான பெருந்தவத்தினால் கொதிப்புறச்செய்தார். குழந்தாய்! குலத்துக்கு ஆனந்தகரனான அந்தப்புத்திரன் அவ்வாறகையாயிருந்ததைக்கண்டறிந்து, பிதிர்க்களனைவரும் பிதிர்லோகத்திலிருந்துவந்து, பின்வருமாறு சொல்லலானார். 'ஔர்வனே! புத்ரனே! உனது கடுமையான தவத்தின் மஹிமையைக் கண்டோம். லோகங்களிடம் அனுக்ரஹஞ்செய். உன் கோபத்தையடக்கு. குழந்தாய்! முன்னே க்ஷத்திரியர்கள் ஹிம்ஸிக்கையில் பரிசுத்தாத்மாக்களான பார்க்கவரனைவரும் சக்தியில்லாமல் தங்கள் வதையைத் தடுக்காமலிருக்கவில்லை. குழந்தாய்! நீண்ட ஆயுளினால் எப்போது எங்களுக்குத்துயரம்உண்டாயிற்றோ அப்போது நாங்களாகவே க்ஷத்திரியர்களால் கொல்லப்படுவதை விரும்பினோம். முன்னே ஒருவன் பார்க்கவர்களின் கிருகத்தில் தனத்தைப் புதைத்துவைத்ததும் க்ஷத்திரியர்களுக்குத் துவேஷத்தையும் கோபத்

தையும் உண்டாக்குவதற்காகவே தான். பிராம்மணோத்தமனே! நபேரனே நமக்கு மிகுதியான தனத்தைக் கொணர்ந்து கொடுத்த பாதிலும் அந்தத் தனத்தினால் ஸ்வர்க்கத்தை விரும்புகின்ற நமக்கு பூகவேண்டியதென்ன? குழந்தாய்! எங்கள் எல்லோரையும் யமன் டுக்கமுடியாமலிருந்தபோது நாங்களே ஸம்மதித்துக் கண்டுபிடிக்ப்பட்ட உபாயம் இது. குழந்தாய்! ஆத்மஹத்தி செய்துகொள்ளும் ருஷன் நல்ல லோகங்களைப்பெறான். அதனால், செம்மையாக ஆராய்து நாங்கள் ஆத்மவதம் செய்துகொள்ளவில்லை. அப்பா! நீ செய்க்கருதுகிற இந்தக்காரியம் எங்களுக்கு இஷ்டமன்று. எல்லாலோகங்ளையும் அழிப்பதாகிய பாபத்தினின்று இந்த மனத்தையடக்கு. குழந்ாய்! புத்திரனே! க்ஷத்திரியர்களையும் ஏழுலோகங்களையும் கெடுகாதே. தவத்தின் வன்மையைக்கெடுக்கும் கோபத்தைக் கொல்' ன்றனர்.

---

## நூற்றுத்தொண்ணூற்றாறாவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம் (தொடர்ச்சி.)

---

(பித்ருக்கள் சொற்படி ஔர்வர் கோபத்தை ஸமுத்திரத்தில்விட்டது.)

ஔர்வர், 'பிதிர்க்களே! நான் கோபத்தினால் எல்லா லோகங்களையுமழிப்பதைப்பற்றி முதலிற்செய்த பிரதிஜ்ஞை வீணாகாது. வீண்கோபமும் வீண்பிரதிஜ்ஞையுமுள்ளவனாக நான் ஜீவித்திருக்கமாட்டேன். நிறைவேற்றப்படாத கோபம், அக்கினி அரணிக்கட்டையை எரிப்பதுபோல் என்னை எரித்துவிடும். காரணம்பற்றியுண்டான கோபத்தை எவன் பொறுப்பதற்கு யத்னஞ்செய்கிறானோ அந்தமனிதன் தர்மார்த்தகாமங்கள் மூன்றையும்ஸரியாகக்காப்பதற்கு வல்லவனாகான். எல்லாவற்றையும் ஜயிக்கவிரும்புகின்ற அரசர்களினால் துஷ்டர்களைச்சிக்ஷிப்பதற்கும் சிஷ்டர்களை ரக்ஷிப்பதற்கும் கோபம் காலங்களில் பிரயோகிக்கப்படுவதாகும்; க்ஷத்திரியர்கள் பிருகுவம்சத்தவரை வதஞ்செய்தபோது கர்ப்பப்பையில் அடங்கித் தொடையிலிருந்த நான் தாய்வர்க்கங்களின் கூச்சலைக்கேட்டேன். ஈனர்களான க்ஷத்திரியர்கள் பிருகுவம்சத்தவரைக் கர்ப்பமுதல் ஒழித்ததை லோகத்திலுள்ள தேவர்முதலானவர்கள் எப்போது பொறுத்தனரோ அப்போதே கோபம் என்னிடம் ஆவேசமாயிற்று. பயத்தினால் விரித்த

கூந்தலோடுகூடிய என் தாய்மார்களும் தந்தைமார்களும் எந்தவுலகங் களிலும் அடைக்கலம் பெறுமற்போனுர்கள். அந்தப் பார்க்கவர்களின் மனைவிகளை யாரும் காப்பாற்றுமலிருந்தபோது மேன்மையுற்ற இந் என்தாய் ஒற்றைத்தொடையில் என்னைத்தாங்கினுள். பாவத்தைத் தடு பவன் உலகங்களில் எப்போதிருப்பனே அப்போதுதான் எல்லா உ கங்களிலும் பாவஞ்செய்பவன் இரான். எப்போது பாவிஷயத்தடு பவன் எங்கும் நேரிடாமலிருக்கிறனே அப்போது அனேக ஜனங்கள் பாவச்செய்கைகளையே செய்துகொண்டிருப்பார்கள். எவன் ஸமர்த்தன யிருந்தும் தெரிந்திருந்தும் தன் சக்தியினுல் பாவத்தைத் தடுக்க வில்லையோ அவனையும் அந்தப்பாவம் சேரும். ராஜாக்களும் தேவ களும் காப்பாற்றச் சக்திபுள்ளவராயிருந்தும், என் பிதிர்க்கள் இவ்வு கத்தில் ஜீவித்திருப்பதை இஷ்டமாக நினைத்து, அவர்களை ரக்ஷி பதற்கு ஆரம்பிக்காமற்போயினர். அதனுல், இந்தலோகங்களின்மே நான் கோபித்தேன். எனக்குச் சாமர்த்தியமிருக்கிறது. உங்களுடை சொல்லையும் நான் அதிக்ரமிக்கக்கூடவில்லை. நான் ஸமர்த்தனுக இரு தும் உபேக்ஷைசெய்தால் இவ்வாறே மறுபடியும் உலகங்களுக்கு பாபத்தினுல் பெரிய பயம் உண்டாகும். என் கோபத்தினுலுண்டா எந்த அக்னி லோகங்களைப் பக்ஷிக்க விரும்புகிறதோ அதனையடக் னுல் அது தன் வலிமையினுல் என்னையே எரித்துவிடும். தேவர்களே நீங்களும் எல்லா உலகங்களுக்கும் நன்மையையே விரும்புகிறவர்களெ பதை நானறிகிறேன். ஆதலால, உலகங்களுக்கும் எனக்கும் எ நன்மையோ அதனைக் கட்டளையிடுங்கள்' என்று சொன்னுர்.

பிதிர்க்கள், 'உன் கோபத்தினுலுண்டான எந்த அக்னி லோக களைப்பற்ற ஆரம்பிக்கிறதோ அதை ஜலத்தில்விட்டுவிடு; உனக்கு ஸுக உண்டாகட்டும். லோகங்கள் ஜலத்தைஆதாரமாகக்கொண்டவை. எ லாரஸங்களும் ஜலமயம். உலகமே ஜலமயம். பிராம்மணேத்தமனே ஆதலால், இந்த உன்கோபாக்னியை ஜலத்தில் விட்டுவிடு. பிராம்ம னே! ஸம்மதமாயிருந்தால் உன்கோபத்தினுலுண்டான இந்த அக் ஜலத்தையெரித்துக்கொண்டு ஸமுத்திரத்தில் நிற்கட்டும். உலகங்க ஜலமயங்களென்று சொல்லப்பட்டிருக்கின்றன. குற்றமற்றவனே இவ்வாறு உனது இந்தப் பிரதிஜ்ஞையும் ஸத்யமாகிவிடும். இதனு தேவர்களும் உலகத்தோரும் நாசமடையார்கள்' என்றனர். குழ தாய்! பிறகு, ஔர்வர் அந்தக்கோபத்தினுலுண்டான அக்னி ஸமுத்திரத்தில் விட்டுவிட்டார். அதுதான் வடவாமுகாக்கினியென்ன

பட பெருங்குதிரைத்தலையாகி ஸமுத்திரத்திலுள்ள ஜலங்களைப் பக்ஷிக்கிறதென்று வேதமறிந்தவர்கள் அறிகின்றனர். அஃது அக்னியை யிலிருந்துகக்கி ஸமுத்திரஜலத்தைக் குடிக்கிறது. ஞானிகளிற் சிறந்தபராசரனே! ஆதலால், நீயும் லோகங்கள் முக்கியமானவையென் றிந்து அவற்றைக் கெடுக்காமலிருக்கக்கடவாய். உனக்கு ஸுகமுண் டாகட்டும்" என்று சொன்னார்.

---

## நூற்றுத்தொண்ணூற்றேழாவது அத்தியாயம்.

## சைத்ரரதபர்வம் (தொடர்ச்சி.)

(பராசரர் வஸிஷ்டருடைய உபதேசத்தினால் உலகத்தை யழிப்பதைவிட்டு ராக்ஷஸரையழிப்பதற்குயாகஞ்செய்ய ஆரம்பித்ததும், புலஸ்தியருடைய பிரார்த்தனையினால் யாகத்தை முடித்ததும்.)

மஹாத்மாவான வஸிஷ்டரால் இவ்வாறு சொல்லப்பட்ட அந்தப் பராசரப் பிரம்மரிஷி தமது கோபத்தை ஸர்வலோகங்களையும் அழிப் பதிலிருந்து நிவ்ருத்திசெய்தார். சிறந்த பிரம்மதேஜஸுள்ளவரும் வேதமறிந்தவரெல்லாரிலும் சிறந்தவரும் சக்திபுத்திரருமான அந்தப் பராசரமுனிவர் ராக்ஷஸஸத்ரம் என்னும் யாகஞ்செய்தார். அப்போது அம்மஹாமுனி, சக்தியின்வதத்தை நினைத்து முதிர்ந்தவர்களும் பால ர்களுமான ராக்ஷஸர்களைத் தாம் செய்யும் யாகத்தில் எரித்தார். வஸிஷ் டர், 'இவனுடைய இரண்டாவது பிரதிஜ்ஞையையும் நான் தடுக்கமாட் டேன்' என்ற நிச்சயத்தினால் அவரை ராக்ஷஸவதத்திலிருந்து நிவ்ருத் திக்கச்செய்யவில்லை. அந்த யாகத்தில் அந்தப் பராசரமுனிவர் ஜ்வலிக் கின்ற திரேதாக்னிகளின் முன்னிலையில் நான்காவது அக்னியைப்போ லிருந்தார். தமது சக்திக்குத்தக்கபடி ஹோமஞ் செய்யப்பட்ட அந்தப் பரிசுத்தமான யாகத்தினால் அந்த ஆகாயம் மேகங்கள் போனபிறகு ஸூர்யனால் பிரகாசிப்பதுபோல் பிரகாசிக்கச் செய்யப்பட்டது. அங்கே தமது பிரம்மதேஜஸினால் பிரகாசிக்கின்ற அந்தப்பராசரரை வஸிஷ் டாதி முனிவர்களெல்லாரும் இரண்டாவது ஸூர்யனைப்போல் நினைத் தனர். பிறகு, உயர்ந்த புத்தியானாகிய அத்ரிமுனிவர் பராசரரை யன்றி வேறொருவரால் ஸாதிப்பதற்கு முற்றும்முடியாத ராக்ஷஸ வதத்தை நிறுத்தக் கருதி அவரிடம் வந்தார். சத்துருக்களை

